


திருத்தொண்டு

என் நண்பர்க்காகச் சந்தா சேர்த்து அனுப்பியுள்ளேன். நான் கமிஷன் மண்டியில் கணக்கராக இருந்தாலும் ஓய்வு கிடைக்கும்போது சந்தா சேர்க்கும் பணியில் ஈடுபடுகிறேன்.

—தேனி முருகேசன், தேனி.

நன்றி

"வையம் சுமப்பதுவும் வம்பு" என்ற கருத்தை மிக நன்ருக உணர்த்தியமைக்கு மிக்க நன்றி.

—எஸ். மல்லிகா, அம்பாசமுத்திரம்.

அமுத ஓசை

"அருளோசை சகம் புகழ் அமுத ஓசை யாகும்."

—சீ. ஜோதி, விளநகர்.

பாராட்டு

ஒப்புரவறிதலின் பொருள் விளக்கம், மிகவும் பாராட்டுதற்குரியது.

—சி. கணேசன், இருளப்பபுரம்.

மாய்ந்தன ஆசை

மருளோசை நீங்கின. மாய்ந்தன ஆசை அருளோசை கேட்ட பிறகு.

—கு. புனிதவதி, திருமுட்டம்.

உயிர்ப்பிணி

கட்டுரைகள் இக்கூட்டில் வாழும் உயிர்க்கு நன்ருக ஊட்டம் கொடுப்பன. "உயிர்ப்பிணி தீர்க்கும் அருளோசை வாழ்க வளர்க".

—பி. அண்ணுமலை

தொண்டு சிறக்க

தங்கள் அரும்பெரும் தொண்டு சிறக்க எல்லாம் வல்ல இறைவன் இணையடிகளை இறைஞ்சுகிறேன்.

—சா. சொக்கலிங்கம், தேவங்குடி.

பிறமதத்தினர்க்கு

சிவலிங்க உருவம் எவ்வளவு தத்துவ நுட்பங்களைக் கொண்டுள்ளது. உருவ வழிபாடு கூடாது என்று கூறும் பிறமதத்தினருக்கு இது தெரியுமா?

—பி. சுப்பிரமணிய நாடார், பணிக்கன் குடியிருப்பு

இந்துமத மாண்பு

மருளகற்றும் இந்துமத மாண்புரைக்கும் அருளோசை பன்னெடு நாள் தழைத்து வாழி.

—செ. செல்லய்யா, தமிழாசிரியர், சமுத்திரம்.






திங்களிதழ்

ஞாலம் நின் புகழே மிக வேண்டும் தென்
ஆலவாயில் உறையும் எம் ஆதியே.



| மணி 1 | பரிதாபி பங்குனி<br>1973 மார்ச்சு | ஓசை 9 |
|---|---|---|



அருளோசை அன்பர்களுக்கு வணக்கம்!

அருளோசை இதழுக்கு நீங்கள் காட்டி வரும் ஆதரவு கண்டு மிக்க மகிழ்ச்சி. சென்ற இதழ் அனுப்புவதில் மின்சாரத் தட்டுப்பாட்டின் காரணமாக சிறிது தாமதம் ஏற்பட்டது. அதற்குள் பல அன்பர்கள் "இதழ் கிடைக்கவில்லை, உடன் அனுப்புக." என்று எழுதினர். இது அருளோசை படிப்பதில் அன்பர்களுக்குள்ள ஆர்வத்தைக் காட்டுகிறது. மின்சாரத்தட்டுப்பாடு இருக்கும்வரை, சிறிது தாமதம் ஏற்படலாம். பொறுத்துக் கொள்ள வேண்டுகிறோம்.

புதிதாகச் சந்தா சேர்ந்த அன்பர்கள் உடனே இதழ் வரவில்லை என்று எழுதுகின்றனர். ஒவ்வோர் ஆங்கில மாதமும் 15-ஆம் தேதிக்குப்பின் சந்தாதாரர்களாகச் சேரும் அன்பர்களுக்கு அடுத்த ஆங்கில மாதம் 15-ஆம் தேதியன்று தான் இதழ் அனுப்ப இயலும். ஓரிதழுக்கு ஒரு வினாத்தாள் தான் அனுப்பப் பெறும். பொது மன்றங்களுக்கு அனுப்பப்பெறும் வினாத்தாளுக்கு மன்றத் தலைவர் அல்லது செயலாளர் விடை எழுதி அனுப்பலாம். நூல் நிலையங்களுக்கு அனுப்பப் பெறும் வினாத்தாளுக்கு, நூலகர் விடையெழுதலாம். மற்றவர்கள் வினாவிடைப் போட்டியில் கலந்து கொள்ள விரும்பினால் அவர்கள் சந்தாதாரராகப் பதிவு செய்து கொள்ளுதல் நலம்.

அன்பர் பலர் பலவற்றை எழுதி அனுப்புகின்றனர். இங்குக் கட்டுரைகள் நிறைய இருக்கின்றன. தாங்கள் எழுத விரும்பினால், எந்த வகையிலாவது ஒரு சமய நீதியை உணர்த்துகின்ற சிறு கதையாக அருளோசையில் இரண்டு பக்கத்தில் வருமாறு எழுதியனுப்பலாம்.

தேர்ந்தெடுக்கப்படும் கதைகள் வெளியாவதில் சிறிது கால தாமதம் ஏற்படலாம். அதுவரை பொறுத்துக் கொள்ள வேண்டும். திரும்பப் பெற விரும்புவோர் போதிய அஞ்சல் தலைகள் இணைத்தனுப்ப வேண்டும். அருளோசையை இன்னும் எந்த விதத்தில் மாற்றியமைக்க லாம் என்பதில் அன்பர்கள் கருத்துக்களைத் தெரிவிக்கலாம்.

'அருளோசை'க்கும், பேரவைக்கும் எழுதுவன தனித்தனியாக இருத்தல் வேண்டும்.

அ. நாராயணசுவாமி, பி.ஏ.,
பதிப்பாசிரியர்.

## இந்த இதழில்






தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி :

ஆசிரியர், "அருளோசை"

நெ. 9, மகாராஜா சூரியராவ் சாலை,

ஆழ்வார்பேட்டை, சென்னை-600018




*நல்வாழ்த்துக்கள் !*

கடவுள் இல்லையென்ற கொள்கையுடைய சமய நெறிகள் பல. சமயம் என்றாலே கடவுள் உண்மையை ஒத்துக்கொள்ள வேண்டுமென்ற அவசியமில்லை. கடவுளை ஒத்துக் கொள்ளாத நெறிகளும் மனித வாழ்க்கையைச் செப்பம் செய்வதை நோக்கமாகக் கொண்டவையே ஆதலால், அவைகளைச் சமயங்கள் என்று ஏற்றுக் கொள்ளாமல் மறுக்க முடியாது.

கடவுள் உண்டு என்ற கொள்கை எங்ஙனம் தொன்மை யானதோ. அதுபோலவே கடவுள் இல்லை என்ற கொள்கையும் தொன்மையானதே! மனித இயல் வரலாற்றுப்படி கடவுள் உண்டு என்ற கொள்கை தோன்றும் முன் கடவுள் இல்லை என்ற கொள்கையும் தோன்றியிருக்க வேண்டும். திருவளர் செல்வ, நம்முடைய அறிவுக்கு எட்டிய வரையில் கடவுள் இல்லை என்ற கொள்கை 2500 ஆண்டுகளுக்கு முந்தியது. சமணத்தை விளக்கிய மகா வீரர், கடவுள் இல்லை என்ற கொள்கை அணியில் நம்முடைய அறிவுக்குத் தெரியும் முதல் அறிஞர். திருவளர் செல்வ, நீ வரலாற்றுப் புத்தகங்கள் சிலவற்றில் சமணசமயத்தைக் கண்டவர் மகாவீரர் என்று படித்திருப்பாய். அது தவறு. அவருக்கு முன்பே சமண சமயம் தோன்றிவிட்டது. மகாவீரர், சமண சமயத்திற்கு நல்ல வடிவம் கொடுத்தார். கடவுள் இல்லையென்ற கொள்கை யால் கடவுள் உண்டு என்ற கொள்கை உறுதி பெற்றே

வளர்ந்து வந்திருக்கிறது. ஆதலால், கடவுளை நம்புகிறவர்கள் கடவுள் இல்லையென்ற அணியைக் கண்டு, கவலைப் பட வேண்டிய அவசியமில்லை.

திருவளர் செல்வ, சமண சமயத்தைத் திறனாய்வு செய்யும் பொழுதே கடவுள் உண்டா? இல்லையா? என்பதையும் ஆய்வு செய்ய வேண்டும். கடவுள் உண்டு என்னும் தொல் கொள்கையினர் தாம் நம்பும் கடவுளுண்மைக்கு இந்த உலகத்தைச் சாட்சியாக வைக்கின்றனர். காணப்படும் உலகத்தைக் கொண்டு, காணப்படாத கடவுளை அறிந்துணர் தல் வேண்டும் என்று பரிமேலழகரும் முதற்குறள் உரையில் எழுதினார். கடவுளிலிருந்து உலகம் உற்பத்தியானது என்ற கொள்கை திறனாய்வுக்குரியது. இதிற் பல புதிய வினாக்கள் தோன்றும். இந்தச் சிக்கலிலிருந்து தப்பித்துக் கொள்வ தற்குச் சிலர், உலகமும் இயற்கை—கடவுளும் இயற்கை, உலகமும் என்றும் உள்பொருள்-கடவுளும் என்றும் உள்பொருள் என்பர். இன்னும் கடவுள் மட்டுமே உள்பொருள்; உலகம் உள்பொருளன்று. அஃது ஒரு தோற்றமே என்பாரும் உண்டு. வேறு சிலர், உலகமே உள்பொருள்-கடவுள் உள்பொருளல்ல என்றும் கூறுவர். இங்ஙனம் கூறுபவர்களே சமணர்கள்.

திருவளர் செல்வ, உலகம்-கடவுள் இரண்டும் ஒன்றல்ல. இரண்டும் என்றுமுள்ள தனித்தனி இயற்கைப் பொருள்கள் என்றால் என்ன? அங்ஙனம் கொள்ளுதல் கூடாதா? என்ற கேள்வி எழலாம். அங்ஙனம் கொள்ளலாம்; அப்படிக் கொள் வோரும் உண்டு. அத்தகைய கொள்கையிலும் இடருண்டு. அதாவது கடவுளுக்கும் உலகத்திற்கும் என்ன உறவு? அல்லது தொடர்பு? ஒன்றுக்கு மேற்பட்ட மூலப்பொருள்களை ஒன்றோடொன்று தொடர்பு படுத்தும் பொழுது ஏற்படும் இடர்கள் பலப்பல. மூலப்பொருள்கள் பல என்றால் அவற்றுள் ஏற்றத்தாழ்வு-சம்பந்தம் ஆகியன காண்பது பெரிய புதிர். நிலையான பொருள்கள் பல. ஆனால், அவை ஒன்றுக்கொன்று தொடர்புடையன அல்ல; என்றாலும், ஆய்வுக்குப் பொருந்துவ தில்லை. ஏன்? இன்று நம்முடைய காதுகளில் விழும் கேள்வியே அதுதானே! கடவுளுக்கும் உலகுக்கும் தொடர்

பில்லையென்ருல்-கடவுளால் உலகுக்குப் பயனில்லை யென்ருல் கடவுள் உண்டு என்று நம்புவதால் யாதுபயன்? பயனில்லாத ஒன்றை உண்டு என்று நம்புவதைவிட, இல்லை என்பதால் என்ன இழப்பு? இழப்பில்லாதது மட்டுமன்று; பயனற்ற ஒன்று உண்டு என்று கருதுவதை விட இல்லையென்று கூறுவதே மேலானதாகும்.

திருவளர் செல்வ, கடவுள் உண்டு அல்லது இல்லை என்ற இரண்டு தத்துவங்களையும் இனி நாம் விளக்கமாக ஆராய வேண்டும். ஏனெனில். நம்முடைய சமயத்தில் கடவுள் உண்டு என்ற கொள்கை வலியுறுத்தப் படுகிறது. அதுமட்டுமல்ல, சமய வாழ்க்கையிலேயே கடவுள் உண்டு-இல்லை என்ற கொள்கை ஒரு திருப்பு மையமாகும். இக்கொள்கையில் தெளிவு பிறந்து விட்டால் வாழ்க்கையில் ஒளி பொருந்தும். அடுத்த கடிதத்தில் அதுபற்றி விளக்கமாக எழுதுவோம்.

இன்றக் குன்றடிகள்

# ஆழ்வார் போற்றும் இராமபிரான்

திரு. ர. வேங்கடரத்தினம்

பெரும்பாலும் கண்ணனையே போற்றிப் பாடும் ஆண்டாள் கூட இராமபிரானை மனத்துக்கினியான் என்றழைத்து அதேமூச்சில், கோபத்தினால் தென் இலங்கையரசனைக் கொன்று தீர்த்தவன் எனப் பேசுவாள்.

'சினத்தினால் தென்னிலங்கைக் கோமானைச் செற்ற
மனத்துக்கினியானைப் பாடவும் நீ வாய் திறவாய்'

இவை 'கனைத்திளம்' என்ற திருப்பாவை யடிகள் ஆகும். மனத்துக்கு இனிக்கும் பண்புகள் அமையப் பெற்ற இராமபிரானையே சினங் கொள்ள வைத்தது இராவணன் தீச்செயல்! எனவே, கொன்றமையும் குணமாகப் பாடப் பெறுகிறது. தேவியைக் கவர்ந்து வந்த தீச்செயலைக் கண்டு வெகுளா திருத்தல் கூடுமோ? ஆண்டாள், பிராட்டியை விட்டுக் கொடுப்பாளா? எனவே இராமன் சீற்றம் திருவருட் செயலே!

சென்றங்குத் தென்னிலங்கை செற்றாய் திறல் போற்றி!

இவ்வண்ணம், பிறிதொரு பாடலில் மீண்டும் ஆண்டாள் ஐயனைத் தட்டிக் கொடுப்பாள். இங்கும் இராவணவதம் தான் இராமனது பெருமையினை எடுத்தியம்பும் பயன்படுகிறது நாச்சியாருக்கு!

ஆண்டாளின் தந்தையார் பெரியாழ்வார் பாடிய திருமொழிப் பாசுரங்களில் இராம காதையினைக் காணலாம். இனி எவளோ குற்றம் சொல்லக் கேகயன் மகள் கொடுஞ் சொல் உதிர்க்கக் கேட்டவுடன், பெற்ற அன்னையையும் உற்ற அரசையும் பின்னே விடுத்துக் கானகத்திற்குப் போய்க் காலம்தள்ளியது ஆரணியகாண்டக் கதையில் பேசப் படும். பாசுரம் வருமாறு.

கூன்தொழுத்தை சிதகுரைப்பக் கொடியவள் வாய்க் கடிய (சொற்கேட்டு,
ஈன்றெடுத்த தாயரையும் இராச்சியமு மாங்கொழிய
கான் தொடுத்த நெறி போகிக் கண்டகரைக் களைந்தானூர்
தேன்தொடுத்த மலர்ச் சோலைத் திருவரங்க மென்பதுவே.

எவளோ பணிப்பெண் சொன்னாள் என்பதற்காக இராமபிரான் கானகம் போக வேண்டி வந்தது என்பதில் ஆழ்வார்க்கு மிகவும் மனக்குறை. கூன் முதுகுக்காரி, அரண்மனைப் பணிப்பெண் எவளோ குற்றம் கண்டு பிடித்துக் கிளறி விட்டதுதானே இராமாயண வரலாறே! கடைசியில் அண்ணல் கான் போந்ததும் இனிதாகவே முடிந்தது. தீயோரைத் தீர்த்துக் கட்டி வைத்தவர் நல்லோர் வாழவகை செய்து, ஸ்ரீரங்கப் பதியிலே கோயில் கொண்டு விளங்குகிறார் என்று ஆழ்வார் முடிப்பார்.

—:0:—




## மனத்தின் வன்மை

தவத்திரு. குன்றக்குடி அடிகளார்

மனம், மிக்க நுட்பமான ஓர் உறுப்பு. அது நுட்பத்தினும் திட்ப முடையது; காலத்தை—எல்லையைக் கடந்து செல்லும் தன்மையது. உலகத்தில் விரைந்து செல்லும் தன்மையன இரண்டு. ஒன்று மனம்; மற்றொன்று காற்று. இவ்விரண்டும் இன்றி வாழவே முடியாது. இவ்விரண்டும் வாழ்விக்கும் தகுதியும், கெடுக்கும் நகுதியும் உடையன.

மனம், பல்வேறு தொழில்களையுடையது. குறிப்பாக நினைப்பு என்பது மனத்தினுடைய மிகச் சிறந்த தொழில். மனித வாழ்க்கையில் நினைப்பு பயனுடைய அகத்தொண்டு. நினைத்தல்-தொழில் ஒரு வகை யானது அல்ல. பல பொருள் தன்மையது. அறிவுப் பெருக்கத்திற்குக் கற்றலும் கேட்டலும் துணை செய்தலைப் போல, நினைத்தலும் துணை செய்யும். அதுமட்டுமல்ல, அறிவு வளர்ச்சிக்குக் கற்றல்-கேட்டலைவிட நினைத்தல் மிக்க பயனைத் தருகிறது. கற்றல்-கேட்டலின் மூலம் பெறும் அறிவு என்ன இருந்தாலும் கடன் வாங்கிய பிழைப்பே. நினைத்தலின் மூலம் பெறும் அறிவே உண்மை அறிவு. முன் இரண்டின் வழிப் பட்ட அறிவு, முற்றிலும் முழுமையாகி விடுவதில்லை. நினைத்தலின் மூலம் பெறும் அறிவே முழுமையான அறிவாகும். கற்றல் கேட்டலின் மூலம் பெற்ற அறிவுக்கு மறதி நேரலாம். நினைப்பில் தோன்றிய அறிவுக்கு மறதியில்லை.

அதுமட்டுமா? கற்றல்-கேட்டலின் வழிப் பெற்ற, அறிவையும் உயிர்க்கு நிலையானதாகச் செய்யும். உற்றுழி உதவச் செய்வதும் இந்த நினைவே யாம். சிலர் நிறையப் படித்திருப்பார்கள். அவர்கள் பேசிக் கொண்

டிருக்கும் பொழுது திடீரெனத் தடவுவார்கள்-தட்டித் தடுமாறுவார்கள்; தலையைச் சொறிவார்கள்; உதட்டைக் கடிப்பார்கள்; கையை உதறுவார்கள். தம்மில் எளியார் யாராவது பக்கத்திலிருந்தால் எரிந்து விழுவார்கள். இவ்வளவு அலங்கோலமும் எப்பொழுது? நினைவு கைகொடுக்காத பொழுது!

மேலும் நினைவுப் பண்பு நன்றியோடு தொடர்பு உடையது. அது போலவே சில சமயங்களில் தீமையோடும் தொடர்புடையது. ஏன்? தெளிவாகச் சொன்னால் நினைவு நல்ல வழியில் இயங்கும் பொழுது, நன்றி, பண்பாடு, சான்றாண்மை என்ற நன்னெறிகளில் படர்கிறது. அதுவே நெறியில்லா நெறியில் படருமானால் வன்கண்மை, கயமை ஆகிய புன்னெறிகளில் படர்ந்து தன்னையுடைய மனிதனை இம்மையோடன்றி, எழுமையும் நின்று அழிக்கிறது.

(வளரும்)

# திருமால் அடியர் பெருமால்

கச்சி ஆளவந்தார்

திருமாலை விட்டுணு எனப் போற்றிப் பெருநலம் பெறுகின்றது பலர்க்கு அநுபவத்தில் உளது, விட்டுணு என்னும் வடசொல், ஆரியத்தில் எங்கும் நிறைந்தது என்னும் பொருளையுடையது. விட்டுணுவை வழிபடும் நெறிக்கு வைணவம் என்பது பெயர். திருமால் வழிபாடு தொல்காப்பியர் காலத்திற்கு முன்னரே இருந்தது. நாளடைவில் அந் நெறி பிறநெறிகளைப் போலத் திருந்தி வளர்ந்து செப்பம் உறுகின்றது. ஆரியத்திலும் தமிழிலும் பலப்பல நூல்கள் வைணவத்தை உணர்த்துஞ் சிறப்பைக் கற்ரோர் அறிவர். வடகலை தென்கலைப்பிரிவால் வைணவம் கெடாது, வழக்காடும் வைணவர் ஒருகால் கெடலாம். 'ஸ்ரீவைஷ்ணவம்' என்று சிறப்பித்துச் சொல்லப்படும் தனிநெறியுண்டு, அதுவே நெறியின் முடிவு, சாலத் தூயது. 'ஸ்ரீவசநபூஷணம்' என்பது போலும் ஒரு சிறப்புப் பெயர் அது. வசநம் எனப் பொதுவாக உள்ளன எல்லாம் நீக்கியுணர்த்தற் பொருட்டு ஸ்ரீ என்ற அடைகொடுத்து வழங்குவது போன்றது ஸ்ரீவைஷ்ணவம் என்பது. இதை நன்கு விளக்கும் ஒரு தமிழ்நூலை மிகப் பல யாண்டின் முன்னர்ப் புதுவையிலிருந்த வைணவப் பெரியார் ஒருவர் எழுதி வெளியிட்டார். அது மிகச் சிறந்த உரைநடை நூல்.

அடியார் என்பது யான் என, எனது என உள்ள எல்லாப் பற்றுக்களும் அற்றவராய் முடிந்த நிலையைப் பெற்றுப் பேரின்பமே துய்த்தற்கு அடியாயுள்ளதை எய்தியவர் என்று பொருளாகும்.

ஒரு நொடியும் அகல(ப் பிரிந்திருக்க) வல்லேன் அல்லேன் என்று பெரிய பிராட்டியார் நிலையாக வாழும் திருமார்பா, ஒப்பிலாப் புகழோய், இதற்குக் காரணமாயிருக்கும் மூவகைச் சேதநாசேதங்களை உடைமையாக உடையோய், அம்மேன்மையுள்ள நிலையினின்றும் இறங்கி மிக்க இழிவுடைய என்னையும் ஆள்வோய், ஒப்பற்ற தேவர் திரளும் மநநசீலரினமும் விரும்பி வழிபடும் திருவேங்கடம் உடையோய், உன்னைப் புகலடைதலன்றிப் புகலடைய வேறு யாதும் இல்லாத அடியேன் உன் திருவடிக்கீழ் விழைந்து நுழைந்தேன் (பற்றினேன்.),

அகலகில்லேன் இறையும் என்று அலர்மேல் மங்கை உறைமார்பா,
நிகரில் புகழாய் உலகம் மூன்று(மு)டையாய், என்னை ஆள்வானே,
நிகரில் அமரர் முனிக் கணங்கள் விரும்புந் திருவேங்கடத் தானே,
புகலொன்று(ம்) இல்லா அடியேன் உன் அடிக்கீழ் அமர்ந்து
[புகுந்தேனே.

என்று திருவடிப் புகலடைந்தோரே அடியார். இறையும் அகல கில்லேன் என்று உறைமார்பு எனவும், மங்கையுறைமார்பு எனவும் இயைத்துப் பொருள் கொண்டனர் முன்னோர். அலர்மேல்மங்கை இறையும் அகலேன் என்று உறைதல் நோக்கம் அன்று என்றுட் கொண்டு அகல கில்லேன் என்று உன் அடிக் கீழ் அமர்ந்து புகுந்தேன் என்று இயைத்தல் ஆழ்வார் திருவுள்ளக் கிடையாகும்.

இத்திருப்பாசுரத்தில் நாலுகுணம் உபதேசிக்கப்படுதல் அறியத் தக்கது, அந்நான்கும் சௌலப்பியம், சௌசீலியம், சுவாமித்துவம், வாற்சலியம் எனப்படுவன.

திருமாலின் இயல்பாயதும் நிகரில்லாததும் முடிவாயதும் அடியார்க்கு வீடுபேருவதும் ஆய பெருநிலத்து (பரத்துவ) நிலையில் இந்நாற்குணமும் இருந்தும், பரமசாம்யாபந்நர் (-அடிசேர்ந்தார்)க்கு முகம் கொடுத்திருக்கின்ற இடம் ஆதலின், பகல் விளக்குப் போல ஒளியின்றி நிற்கும், முகம் கொடுத்திருத்தல்-கண்ணுக்குப் புலனும்படி மாருத திருமுன் (நித்திய சந்நிதி) ஆதல். அங்குற்று அந்நிலை அடைதல் அடியரானுர் எல்லார்க்கும் உரியதேயாயினும், அதிகாரிபேதம் இயல்பாதலின், உரிமையிருப்பினும் அடைதல் அரிதாகின்றது. அவ்வடையாமை தௌர்லப்பியம் எனப்படும். துர்லபம்;-தௌர்லப்பியம் பெறலருமை.

'அர்ச்சாவதாரம்' எனப்படும் நிலையில் எளிமை (தண்மை)க்கு எல்லை நிலமான உலகர்க்கு முகம் கொடுத்துக் சொண்டிருக்கையில் இருட்டறையில் விளக்குப் போல மிக ஒளிர்வன அந்நாற் பண்பும் (குண சதுஷ்டயம்). பண்புகள் பொருள் உள்ள இடங்களிலே தான் விளங்கும். பரத்துவ நிலையில் உள்ளோரும், அங்குப் பகல் விளக்காயுள்ள பண்புகளை அநுபவம் பண்ணுகைக்கு இங்கு வருதல் வழக்கம்.

முற்கூறிய நாற்பண்பும் முறையே திருமாலைக் கண்டு பற்றுகைக்கும், அவனது மேன்மை கண்டு அகலாமைக்கும், குறையை நிறை செய்யும் என்று அன்பு செய்கைக்கும், குற்றம் கண்டு அஞ்சி விலகாமைக்கும் உறுப்பாகும்.

(1) குறைவிலா நிறைவை (பூர்த்தியை)யும் தன்வ (சுவாதந்திரி)யத்தையும் குலைத்துக் கொண்டு (2) தன்னை விரும்பாதாரையும் தான் (திருமால்) விரும்பி நிற்கும் இடம் அர்ச்சாவதார நிலை. அந்நான்கு பண்புள்ளும் தலையாய சௌலப்பியமே பிரபத்திக்கு முதலாவது.

குறைவிலா நிறைவு தன்வயம் இரண்டனையும் குலைத்துக் கொண்டு திருமாலே தன் அடியர்க்கு அருளும் நிலைமை அவன் சௌலப்பிய சௌசீலியம் இரண்டனையும் தோற்றும். தன்னை விழையாதாரையும் தான் விழைந்து நிற்கும் பண்பு, சுவாமித்துவம் வாற்சல்லியம் இரண்டும் தோற்றும். குலைத்து என்னது கொண்டு என்றதால் (குலைத்துக் கொண்டு என்றமையால்) தன் விருப்பம் ஒழிய இவ்விரண்டினையும் குலைக்க வேறு அடி (ஹேது) இல்லை என்க.

தன்னை வேண்டாதாரைத் தான் வேண்டி நிற்கும் இடம்:—தான் இவ்வண்ணம், பெறற்கு எளியனுய் வந்து நின்ருல், அரியவன் எளியவனுய் நிற்கப் பெற்ரேம் என்று அன்பு மிக்கு, மேல் விழுகையும், அவ்வெளிமையே ஏதுவாகப் பற்ருத உலகரைத் தான் (திருமால்) விட மாட்டாத அளவும், அவ்வுலகரை ஒழியச் செல்லாமையும் தோற்றும்படி நிற்குமிடம் அர்ச்சாவதாரம். சுலபம்:—சௌலப்பியம், சுசீலம்-சௌசீலியம், ஸ்வம்-உடைமை. சுவாமித்துவம்-உடையனுந்தன்மை வத்சலம்-வாத்சல்யம்-அன்புடைமை, ஈண்டு ஆண்டவன் அடியரிடத்து வைக்கும் அருளைக் குறிக்கும். அதனைப் பக்தவத்சலம் என்னும் பெயரான் அறிக.

எல்லா வகையிலும் குறைவிலா நிறைவினனுய்த் தன் வயத்தனுய் நிற்கும் தன்னைக் குறியாத உலகரைத் தான் (திருமால்) பற்றுதற்கு மேற்பட்ட சௌலப்பியம் இல்லை.

அந்தர்யாமித்வம், பரத்வம், வ்யூஹம், விபவம், அர்ச்சாவதாரம் என்னும் அர்த்தபஞ்சகத்துள்ளே முதல் நான்கும் தௌர்லப்பியம். முடிவாயதே சௌலப்பியம். ஐந்தும் சௌலப்பியம் உள்ளனவேயாம், ஆயினும் ஒன்றற்கொன்று மிகும்படி சௌலப்பியம் வாய்ந்திருப்பதால், அதற்கு எல்லை நிலம் அர்ச்சாவதாரமே. தண்மை (எளிமை)க்கு எல்லை நிலம் உலகர் (சமுசாரிகள்), அவர்க்கு அருளும் திருமாலுடைய சௌலப்பித்யத்துக்கு எல்லைநிலம் அர்ச்சாவதாரம்.

அடியர் ஆண்டவனை அநுபவம் பண்ணுகைக்குப் படிமுறை (சோபானகிரமம்) ஆக அர்ச்சாவதாரம், விபவம், வ்யூஹம், பரத்வம் அந்தர்யாமித்வம் என்னும் முறையில் அர்த்த பஞ்சகம் அமையும், ஆண்டவன் அடியர்க்குத் தனது நிலையைத் தோற்றி ஆட்கொள்ளத் தானே வேண்டிச் சௌலப்பியம் முதலிய பண்புகளால் மேற் குறித்த முறையில் நின்று அருள்கின்ருன்.

அந்நிலை ஐந்தற்கும் ஐந்து உவமை முன்னுசிரியர் மொழிந்தனர். மடவர் (அஜ்ஞர்), அறிவர் (ஜ்ஞாநுதிகர்) தொண்டர் (பக்திவிவசர்) என முத்திறத்தர் உளர். முன் (பூர்வ ஆசிரியர் எனப் பூர்வசார்யர்களைக் கூறுவர், அவர்கள் உணர்வு மிகுதியால் வைணவம் அல்லாத பிறவுபாயங்கள் சொருபத்தை அடையவொட்டாது கெடுப்பன என்று, நடுங்கும்படியான சொருபதரிசனத்தால் வந்த உணர்வு நிறைவாலே பிறசமயம் எண்ணாப் பெருமையராகித் திருமாலிடத்திலேயே பொறுப்பு வைத்தவர்கள்.

(1) அந்தர்யாமித்வம் நீர் வேட்கையனுக்கு வேற்றிடத்திற் செல்ல வேண்டாதபடி தான் நிற்கும் இடத்திலேயே நீர் இருக்கின்றது. அந்நீர் நிலையைச் சார்ந்து குடித்து வேட்கையைத் தணித்துக் கொள்ளல் வேண்டும். அதை விட்டுக் கொட்டும் குந்தாலியும் கொண்டு மண்ணைப் பேர்த்தாலன்றிக் குடிக்கக் கிடையாத மண்ணடி நீர் போல்வது அந்தர்யாமித்வம். திருமாலைக் கண்டு பற்ற வேணும் என்று ஆசைப்பட்டவனுக்கு அவன் உள்ளத்திலே (அத்திருமால்) இருந்தும், "கட்கிலீ (உன்னைக் காணும் ஆறு அருளாய். காகுத்தா கண்ணனே) என்னும்" படி கண்ணுக்குப் (விடயம்-) புலனுகாது, எட்டுறுப்புச் செறிவுரு (அட்டாங்க யோக ரூபம்) முயற்சியாலே காணவேண்டும் படியானது அவ்வந்தர்யாமித்வம்.

(2) பரத்வம்: 'மூவா மூவுலகுங் கடந்து அப்பால் முதலாய் நின்ற ஆரமுது' என்கிறபடி, (லீலா விபூதி-) திருவிளையாடற் செல்வத்திற்கு அப்பாற்பட்டிருக்கும் பரத்துவம் வழிபடுவோர்க்கு எளியதோ? அன்று. அந்நீர் வேட்கையுடையான், (1) கொட்டும் (2) குந்தாலியும் வேண்டாது அள்ளிக் குடிக்கலாம்படி நீர் இருக்கின்றது. இருப்பினும் அவனுக்கு அண்மையில் இல்லை. சேய்மையும் சிறிதன்று, எட்டிப் பார்க்க வொண்ணுதது, சேர முடியாதது, தொட்டும் ஆறுதல் உருத இடத்தி லுள்ளது. அஃது அண்டத்துப் புறம்பே பெருகிக் கிடக்கின்ற (ஆவரண ஜலம்–) மறைவிடத்து நீர்.

1. கொட்டு-மண்வெட்டி. 2. குந்தாலி–கல்வெட்டி.

'சக்கிரவாளகிரியும், மகாமேருவும், அண்டகோளகையும், அட்டகுல பர்வதங்களும், திக்கஜங்களும், அட்டநாகங்களும், ஏழுகடலும், ஏழுமுகிலும், பதினலுபுவநமும், தேவர் அசுரர் சித்தர் வித்தியாதரர் கின்னரர் கிம்புருடர் முதலியோர் உள்ளிட்ட பேதங்களும், திங்கள் ஞாயிறும், ஐம்பூத பரிணமங்களும், பேய்த்தேர்போன்ற வியாபாரங்களும் பொதிந்த திரட்சி ஓர் அண்டம், அப்படி வளர்ந்த கோடியண்டங்களுக்கும் அப்பால் ஒவ்வோர் அண்டத்தையும் பத்து மடங்கு பொதிந்தது நீர். இதுவே 'அண்டத்துப் புறம்பே பெருகிக் கிடக்கிற ஆவரண ஜலம்' எனப்பட்டது.

(3) வ்யூஹம் :—நீர் வேட்கையன் மண்ணடிநீர், அண்டத்தப்பால் வெள்ளம் இரண்டாலும் தணியான், பாற்கடலை அடைந்து தணித்துக் கொள்ளலாமே எனின், அண்டத்தப்பாலைப் போலும் மிகுசேய்த்து அன்று பாற்கடல். (மிகு சேய்மை-அதிவிப்ரக்ருஷ்டம்) அண்டத்திப்பால் உள்ளதாயினும், அதுவும் அடைதற்கரியதே (-துஷ்ப்ராபகம்). நீர்க்கு அப்பாலுள்ள நாடுகளின் பெயர்களைக் கேட்டிருக்கின்றேன். கேட்டேயும், சென்று கண்டேனல்லேன். நான் இருக்கும் இப்பரத கண்டத்துள்ளும் கேட்ட இடங்களைக் கண்டதில்லை. கேள்வியால் மட்டும் காண்டற் பயன் எய்துமோ ?

" பாலாழி நீ கிடக்கும் பண்பையாம் கேட்டேயும்
காலாழும் நெஞ்சழியும் கண்சுழலும்-நீலாழிச்-
சோதியாய் ஆதியாய் தொல்வினைஎம் பால்கடியும்
நீதியாய் நிற்சார்ந்து நின்று;

என்கின்றபடியே

கேட்டிருக்கும் அவ்வளவே அல்லாது சென்று காண்பதும் அரிது, காணப் பாற்கடலும் அரிதாயிற்று, திருமால் காட்சியைப் பெற முயலும் அடியர்க்கு வியூஹநிலையும் எளியதன்று என்றபடி.

(4) விபவம் :—திருமால் தன்னை நமக்குக் காட்டுங் கருணைப் பெருக்காலே எத்தனையோ திருவுருவம் கொண்டு திருவவதாரம் பண்ணினர். பத்துத் தோற்றம் (தசாவதாரம்) உலகறி நிகழ்ச்சி (-பிரசித்தம்). " விண்மீதிருப்பாய் மலைமேல் நிற்பாய் கடற்சேர்ப்பாய் மண்மீதுழல்வாய் (இவற்றுள் எங்கும் மறைந்துறைவாய்) (எண்மீ தியன்ற புறவண்டத்தாய் எனதாவி உண்மீ தாடி) உருக்காட்டாதே ஒளிப்பாயோ' என்கின்றபடியே மண்ணுலகிலே தோற்றம் அருளியும் நிலாவியும் இப்பொழுது வாழும் மக்களுக்குப் பற்றும் பொருளாயுள்ள திருமால், பிற்காலத்திற் பிறக்குமவனுக்குக் கிட்டான் அல்லனே" இராமகிருட்டிணர் முதலிய திருவவதாரம் விபவம், அவதார காலத்தில் இருந்த புண்ணியர் கண்டு வழிபட்டுப் பேரின்பம் உற்றனர். அக்காலத்திலே பிறந்திராத நமக்கு அப்பேறு இல்லையே.

" வாட்டுபவம் கொல்புகலி வண்புலவன் பேரின்ப
வீட்டுபவம் கொள்ளைகொள விட்டநாள்-கேட்டுவராது+
எப்பிறப்பில் எங்கண் இருந்து+ஏது புரிந்து+எய்த்தேனே
ஒப்பிறப்பில் வெங்கையுடை யோய்." (75) எனவும்,

[ஒப்பு-சமம், இறப்பு-அதிகம், ஒப்பிறப்பு-சமானதிகம். ஒப்பும் உயர்வும் இல்(லாத) திருவெங்கைப்பதியோனே.]

"வினையரும் புகலிக் கிறைமணப் பந்தர்
விருந்தினுக்கு உதவிலேன் முந்திற்று.
உனையிரந்திடுவான் வந்தனன் பதம்நீ
உதவிஎன் துயர் ஒழித்தருள்வாய்.
......சோண சயிலனே கயிலை நாயகனே" எனவும்

(கவிதாசார்வபௌமர்-) முழுநிலச் செய்யுளார் சிவப்பிரகாசர், முந்திய நிகழ்ச்சியாதலால் பிந்திய பிறப்பினேன் பெற்றிலேன் என வருந்தியது நினைக.

திருவவதாரம் நிகழ்ந்த காலத்திலே அக்காலத்தவரோடு ஓரினத் தனாய்த் திரிந்த திருமால் காட்சி, பிற்காலத்தார்க்குக் கிடைத்திலது. இதைக் கருதியே 'மண்மீதுழல்வாய்' என்றருளினர்.

ஆறு பெருக்கெடுத்தோடிற்று, பெருக்கு நின்ற பின்னர், அப் பெருக்கைக் கண்டு அள்ளி நுகர்ந்து வேட்கையைத் தணித்துக் கொள்ளும் பேறு வாய்த்திலது. வெள்ள நீர், தெளிவுறுங் காலம் வரை குடிக்க உதவாது.

(5) அர்ச்சாவதாரம் :—முன்னை நான்கும் போல்வது அன்றுஇது. அவை ஒன்றினொன்று மேன் மேல் எளிதாயினும், எளிமையின் நிறை வுடையது இது. பெருக்காறு விடாய் தீர்க்காது. விடாய்கெடப் பருக லாம்படி இருப்பது நீர் தேங்கியமடு. பெருக்காற்றிலே தேங்கிய மடுக்கள் போலப் பெருக்காறு பயன்படாது. அம்மடுக்களைப் போல்வது அர்ச்சாவ தாரம். அம்மடுநீர் விடாய்தீர்ப்பது போல்வது, ஆண்டவனது அருட் கோலக் காட்சிப் பேறு முழு எளிமையதாய் அடியார்க்குக் கிடைப்பது.

பூகதஜலம் தேசத்தால் சேய்மையது, ஆவரணஜலமும் தேசகாலத் தாற் சேயது, (வியூகம்) பாற்கடலும் அன்னதே, விபவம் காலத்தாற் சேயது. பெருக்காறு விடாய் தீர்க்குங் கரணமாகாதது. அர்ச்சாவ தாரம் தேசகாலகரணதூரம் இல்லாமல் கோயில்களினும் வீடுகளினும் என்றும் ஒக்க எல்லார்க்கும் கண்ணுக்கு இலக்காம்படி நிற்கின்ற சிறப் புடையது. "பின்னானர் (திருவவதாரகாலங்கட்குப் பிற்பட்டவர்கள்) வணங்குஞ்சோதி" என்று அர்ச்சாவதாரத்தையே தொழுதருளினர் ஆழ்வார். (வளரும்).

திருக்கோயிற் படைப்பு ஒரு நுண்கலைப்படைப்பு; அருளி யலும் அறிவியலும் கலந்த படைப்பு; கலையியலும் பொருளிய லும் இணைந்த படைப்பு; மண்ணுக்கும் விண்ணுக்கும் இணைப்பூட்டும் கருவி. மனிதன் மிருக உணர்ச்சியிலிருந்து விலகவும், அதன்பின் முழு மனிதனாகவும், அதன்பின் தேவனாகவும் வளர்ந்து வாழத்துணை செய்வது திருக்கோயில்.

—தவத்திரு. குன்றக்குடி அடிகளார்.




## தொண்டரடிப்பொடியாழ்வார்

வித்துவான் திரு. கா. அ. மணவாளன், பி.ஏ., பி.ஓ.எல்.,

மற்றென்றும் வேண்டா மனமே மதிளரங்கர்
கற்றினம் மேய்த்த கழலிணைக்கீழ்—உற்ற
* திருமாலைப் பாடுஞ்சீர்த் தொண்ட ரடிப்பொடியெம்
பெருமானை யெப்போதும் பேசு.

சோழ தேசத்துக் காவேரிக் கரையில் 'திருமண்டங்குடி' என வழங்கும் அழகிய கிராமம் ஒன்றுண்டு. அவ்வூரில் நான்கு மறைகளையும் ஓதியுணர்ந்த வேதியர்கள் பலர் வாழ்ந்து வந்தனர். அவர்களுள் தலையாயவர் 'வேத விசார தர்' என்னும் முன்குடுமிச்சோழியர். அவருக்கு வெகு நாட்களாகப் புத்திரப் பேறு இல்லை. ஆதலால் அவர் மனைவியோடு தலயாத்திரை செய்தும் புனித நீராடியும் இறைவனைப் போற்றி வந்தார். அவ்விதம் திருத்தலங்கள் தோறும் சென்று வருகையில் தமிழகத்திற்கு மேற்கேயுள்ள 'யாதவாத்ரி' என்று சொல்லப்படும் திருநாராயணபுரத்திற்கு மனைவியோடு சென்றிருந்தார். அங்குள்ள 'கல்யாணி' என்னும் திருக்குளத்தில் நீராடித் தூய்மையாகத் திருநாராயணனின் திருவடிகளில் தண்டனிட்டுத் தம் மனக்குறையை நீக்கியருள வேண்டினர். அதுவே காரணமாகக் கொண்டு அவ்வெம்பெருமான் அருளால் அவர் மனைவியும் கருவுற்றாள். ஊர் திரும்பி முறையாகப் பத்துத் திங்களும் கழிந்தவாறே மார்கழி மாதத்துக் கேட்டை நட்சத்திரத்தில், நம் தொண்டரடிப்பொடியாழ்வார், அவர்களுக்குப் புதல்வராய் அவதரித்தார். பெற்றோர் அக்குழந்தைக்கு விப்ரகுலத்தில் திருநாரயணன் அருளால் அவதரித்தமையால் 'விப்ரநாராயணன்' என்று பெயரிட்டனர். அக்குழந்தை நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வந்தது. காலத்தில் கற்கவேண்டிய பலவாய கலைகளையும் பெரியோர் கற்பித்தனர். இவ்விதம் திருமண்டங்குடியிலேயே, பல நூல்களை யோதி யுணர்ந்த விப்ரநாராயணருக்கு அவ்வூர்ப் பெரியவர்கள் திருவரங்கப் பெருநகரின் பெருமைகளையும், அரங்கன் திருவோலக்கச் சிறப்பையும் மாறி மாறிக் கூறிவந்தனர். அவைகளைக் கேட்ட விப்ரநாராயணர் திருவரங்கம் சென்று அரங்கனைக் கண்டு களிக்கும் நாள் எந்நாளோ என்று ஏங்கியிருந்தார்.

---

* பின்னீரடியிற் தளைக்கேடுளது

ஒருநாள் பெற்ரோரின் அனுமதியோடு சில தோழர்களை அழைத்துக் கொண்டு திருமண்டங் குடியிலிருந்து புறப்பட்டுத் திருவரங்கம் வந்து சேர்ந்தார். காவிரியில் நீராடித் தூய்மையாகப் பாம்பணையிற் பள்ளி கொண்டுள்ள பரமனுன திருவரங்கநாதனைப் பணிந்து போற்றினர். அவ்வரங்கனின் குழலழகு, கண்ணழகு, வாயழகு என்று இவ்விதம் வடிவழகையெல்லாம் கண்டு களித்து ஆனந்தக் கண்ணீர் வடித்தார். அவன் திருமுடியிலும், திருத்தோள்களிலும், திருமார்பிலும் சாற்றி யிருந்த பல வண்ண நறுமலர் மாலைகளைக்கண்டும், அவன் திருவடிகளில் நிறைந்திருக்கும் திருத்துழாய்களின் நறுமணத்தை நுகர்ந்தும் மகிழ்ச்சி பொங்கக் கூத்தாடினர். அரங்கனுக்குகந்த தொண்டிலே தன்னை முழுமை யாக ஆட்படுத்திக் கொள்ளத் திட்டமிட்டார். அழகிய மணவாளனுன திருவரங்கநாதனும் இவரைத் திருத்திப் பணி கொள்ள விரும்பி விசேட மாகத் திருவருள் புரிந்தார். அன்று முதற் கொண்டு இவர் அப்பெரு மாளுக்கு உகப்பாக என்ன செய்யலாம் என்று யோசித்து, முடிவில் அவன் மிகவும் உகக்கும் படியாக, நறுமணமுள்ள மலர்களையும், திருத்துழா யையும் திருநந்தவனத்தில் உற்பத்தி செய்து அவைகளை மாலையாகக் கட்டி நாள்தோறும் பெருமாளுக்கு அணிவிக்கலாம் என்று கருதி அப்பணியில் ஈடுபடலானுர்.

இத்தொண்டுக்கு வழிகாட்டிகளான பெரியாழ்வாரையும், பொய்கை யில், பூத்தமலலரைப் பறித்துப் பெருமாள் திருவடிகளில் இட்டுவழிபட்ட கஜேந்திரனையும், கண்ணபிரானுக்கு, நறுமணமலர் மாலைகளைக் கட்டி யளித்து வழிபட்ட மாலைக்காரரையும் எண்ணித் தோளில் பூக்கூடை பொலிய, எப்பொழுதும் மண்வெட்டியோடு திருநந்தவனத்தில் உலவி வரலானுர். அப்பொழிலின் வாய் தாழை, தண்ணும்பல், மல்லிகை, முல்லை, * இருவாட்சி, செண்பகம், பச்சை, தமனகம், தாமரை, பாதிரி முதலிய மலர்களின் மணம் எங்கும் கமழ்ந்து வீசி யாவரையும் தன்வசமாக் கியது. இத்தகு பெருமை வாய்ந்த பூம்பொழிலின் புதுமலர்களைக் கொண்டு மாலைகளைக் கட்டிப் பெருமாளுக்கு சாற்றி மகிழ்ந்து வந்தார்.

இவ்விதமிருக்கையில் ஒருநாள் திருக்கரம்பனூரிலிருந்த அழகிய வேசி யொருத்தி, உறையூருக்குச் சென்று திரும்பிவருகின்ற நேரத்தில் மிகவும் வெப்பமாக இருந்ததால் வழியில் கண்ட அப்பூம்பொழிலில் தன் தமக்கையோடு சிறிது இளைப்பாறத் தங்கினுள். தங்கின சில நிமிடங் களுக்குள்ளாகவே அப்பொழிலின் நறுமணத்திலும், இன்காற்றிலும் தன் மனத்தைப் பறி கொடுத்தாள். தேவதேவி என்னும் அக்கணிகை தன் தமக்கையை நோக்கி இவ்வளவு அழகிய வனத்தை இங்கு அமைத்தவர் யார்? இம்மலர்களைச் சூடுபவர்கள் யார்? என்று வினவினுள். அதற்கு அவள் தமக்கையும், இம்மலர் வனத்தை விப்ரநாராயணர் என்னு மொரு வேதியர் அமைத்துள்ளார். அவர் திருவரங்கப் பெருமானிடம் அளவிலாப் பக்தி கொண்டவர். நாள்தோறும் பூக்கும் புதுமலர்களையெல்லாம் பல வகையான மாலைகளாகக் கட்டிப் பெருமாளுக்குச் சார்த்துவார். அம்மலர்

* இருள்வாட்செய்—இருளில் ஒளி செய்யும் பூ.

மாலைகளோடு பொலியும் பெருமாளைக் காண்பதில் அவருக்கு அளவிலா ஆனந்தம் உண்டாகுமாம் என்று பதிலளித்தாள். அந்நேரத்தில் விப்ரநாராயணர் தோளில் தாங்கிய பூக்கூடையோடு, நெற்றியில் திருமண் காப்புப் பொலிய வந்து கொண்டிருந்தார். வழியில் நின்று கொண்டிருக்கும் அழகே உருவான தேவதேவி 'இது என்ன விந்தை' இவர் முன்னே வழியில் நான் நிற்பதைக் கண்டும், என் அழகைச் சிறிதும் பொருட்படுத்தாமல் செல்கின்ற இவரும் ஒரு ஆண் மகனே! என்று தன் தமக்கையிடம் கேட்டாள். அதற்கு அவள் தமக்கையும் 'திரு மாலடியாரான இவரிடம் உன் மோக மயக்குக்கள் செல்லா' என்றுகூறி 'வந்த வழியே போகலாம் வா' என்றாள். அதைக் கேட்ட தேவதேவியும் 'என் வலையில் அகப்படாத மானும் உண்டோ' நீ ஊருக்குப்போ? இன்னும் சிலநாட்களுக்குள் இவரை நான் வசப்படுத்திக் காட்டுகிறேன்' என்று சபதம் செய்து தன்னுடைய அணிகலன்களையெல்லாம் அவளிடம் கழற்றிக் கொடுத்து விட்டு எளிய கோலத்தில் தானும் ஒரு 'பக்தை' போலே விப்ரநாராயணரை யணுகித் தண்டனிட்டு நின்றாள். நாரணரும் வந்த காரியம் என்ன என்று கேட்டார். தேவதேவியும் தான் முன் செய்த தீவினைப் பயனால் இழிவான வேசி குலத்தில் பிறந்த தாகவும், இப்பிறவியிலும் தகாத பாவங்களைச் செய்து கெட்டுவிடாமல் திருவரங்கன் திருத்தொண்டரான உம்மைச் சரணடைந்து உய்யலா மென்று வந்தேன் என்றும் கூறி அவருடைய பாதங்களில் மறுபடியும் வீழ்ந்து புலம்பினாள்.

ஆழ்வாரும் மனமிரங்கி அவளைத் தேற்றிப் பெருமாள் அமுதுசெய்த சேடத்தைத் தானும் உண்டு, எஞ்சியதை அவளுக்கும் கொடுத்தார். பின்பு அவர் கோயிலுக்குப் போய் வரும் வேளைகளில் அம்மலர் வனத்தை நன்கு காவல் புரிந்து அவர் வந்தவுடன் அவருக்குத் துணையாகப் பாத்தியமைத்துக் களை நீக்கிப் புதுமலர் கொய்து அவர் மனமுவக்கப் பணி செய்து வந்தாள். இவ்விதம் ஆறுமாத காலம் தொண்டாற்றி அவர் நம்பிக்கை முழுவதையும் பெற்றாள்.

இவ்விதமிருக்கையில் ஒருநாள் பெருமழை காரணமாகத் தம் குடிலி லேயே ஆழ்வார் தங்கியிருந்தார். தேவதேவியானவள் பாத்தியில் பணி செய்து கொண்டிருந்தமையால் அம்மழையில் நனைந்து ஆழ்வார் தங்கியிருந்த குடிலின் வாசலிலே ஒதுங்கி நின்றாள். மழையில் நனைந்து ஈர ஆடையோடு நடுங்கிக் கொண்டிருக்கும் தேவதேவியை ஆழ்வார் கண்டு மனமிரங்கி உள்ளே வந்து தங்கும்படி கூறினார். அவளும் உள்ளே வந்தவுடன் அவளுடைய நனைந்த ஆடையைக் கண்டு வருந்தித் தன்னுடைய மேலாடையை அவளுக்குக் கொடுத்து உதவினார். அவளும் ஆழ்வாருடைய மேல் வேட்டியை உடுத்திக் கொண்டு அவரை அணுகி, நயமாகப்பேசி, அவருடைய கால்களைப் பிடிப்பதாகச் சொல்லி, அதுவே காரணமாக ஆழ்வாருடைய மதியையும் மயங்கப் பண்ணித் தன் கடைக் கண்ணால் இனிக்க இனிக்கப் பார்த்துப் பரவச மூட்டினாள். ஆழ்வாரும்

வினைப்பயனால் தம்நிலை மறந்து அவளிட்ட வழக்கிலிருந்து விட்டார். தேவதேவியும் மிகவும் வைராக்கிய முடைய அவரையும் அணைத்துத் தான் கருதியபடியே வெற்றி பெற்றுவிட்டாள். பின்பு தன் தமக்மையின் வழியாகப் பல அணிகலன்களையும் பெற்றுத் தன்னை அலங்கரித்துக் கொண்டு ஆழ்வாரைப் போக மயக்கத்தில் அடிமை கொண்டுவிட்டாள். ஆழ்வாருடைய செல்வமும், மலர் வனமுமெல்லாம் அவளுக்கே உரிமை யாயின. சிலகாலம் கழித்து, ஒன்றுமில்லாத வறிய நிலையில் ஆழ்வாரைப் புறக்கணித்து விட்டாள். இந்த நிலையிலும் அவளைப் பிரியமனமில்லாமல் அவள் வீட்டு வாசலிலேயே படுகாடு கிடந்தார்.

அப்போது திருவரங்கப் பெருநகரில் சித்திரை விழா நடைபெறுகிறது. அரங்கன் பிராட்டியோடு உலாவரும் போது ஆழ்வார் தம்மை மறந்து தேவதேவியின் வீட்டு வாசலில் வீழ்ந்து கிடைப்பதைக் கண்டு அவரைத் திருத்திப் பணி கொள்ளத் திருவுள்ளம் கொண்டார். அதற்காகத் தாமே வேலையாள் போல வடிவம் பெற்றுத் தம்முடைய பூசைக்குரிய தங்கவட்டில்களில் ஒன்றையெடுத்துக் கொண்டுபோய்த் தேவதேவியின் வீட்டுக் கதவைத் தட்டினார். அவள் கதவைத் திறந்த வுடன் 'தான் விப்ரநாராயணரின் வேலையாள் என்றும், இந்தத் தங்க வட்டிலை உம்மிடம் அவர் கொடுக்கச் சொன்னார்' என்றும் கூறி அதை அவளிடம் கொடுத்தார். தங்கவட்டில் கிடைத்த மகிழ்ச்சியில் விப்ர நாராயணரைத் தன் வீட்டுக்குள்ளே அழைத்து வந்து பழைய படியே உபசாரங்கள் செய்து பழகலானாள்.

இது இப்படியிருக்க, கோயிலில் பூசைக்குரிய தங்க வட்டில் திருடு போய் விட்டதாக அர்ச்சகர் சொல்லவும், உடனே அரசன் கோயிற் பணியாளர்களை விவரம் கேட்டு, முடிவில் ஒறுக்கவும் தலைப்பட்டான். இந்த நேரத்தில் தேவதேவியின் பணிப் பெண் ஒருத்தியோடு தொடர் புடைய ஒருவனும் அரசனால் தண்டிக்கப் படவே, அவள் பெருமாளுடைய தங்க வட்டில் எங்கள் தேவதேவியின் வீட்டில் உள்ளது என்று கூறினாள். அதைக்கேட்ட அரசாங்க அதிகாரிகள் தேவதேவியின் வீட்டிற்குச் சென்று தங்கவட்டிலைக் கைப்பற்றி அவளைக் கைது செய்து விசாரித்தனர். அப்போது அவள் 'அழகிய மணவாளதாசன் என்று ஒருவன் வந்து விப்ரநாராயணருடைய வேலையாள் என்று தன்னை அறிமுகம் செய்து கொண்டு இந்த வட்டிலை அவர் கொடுக்கச் சொன்ன தாகச் சொல்லிக் கொடுத்துப் போந்தான்' என்றாள். உடனே அதி காரிகள் ஆழ்வாரைக் கூப்பிட்டுக் கேட்டபொழுது தனக்கு அப்படியொரு ஆள் யாரும் இல்லை யென்றும், இது பற்றித் தனக்கு ஒன்றும் தெரியாது என்றும் கூறினார். வழக்கினை விசாரித்த அரசன் ஒருவிதமாகவும் தீர்ப்புக் கூற முடியாமல் அவனிடமிருந்து கைப்பற்றப்பட்ட வட்டிலை வாங்கிக்கோயிலுக்கு அனுப்பிவிட்டு அவளுக்குத் தண்டனை வழங்கினான். ஆழ்வாரை நன்கு ஆராய்ந்து தண்டிப்போம் என்று கருதி அவரைச் சிறையில் வைக்க உத்தரவிட்டான்.

அவ்வேளையில் சீரங்க நாச்சியார் ஆழ்வாருக்காக இரங்கி அரங்கனிடம் பரிந்துரை கூறி அவரை மீட்க வேண்டினுள். பெரிய பெருமாளும் உலகில் ஒருவர் ஒரு காலத்தில் எவ்வளவு தான் நல்வினைகளில் ஈடுபட்டிருந்தாலும், முன் வினையில் செய்த பாவ காரியங்களின் பயனை அனுபவித்தே தீர வேண்டும் என்று கூறி, அவ்வகையில் ஊழ்வினைப் பயனுல் ஆழ்வாருக்கு இத்துன்பம் நேர்ந்தது என்று ஆறுதல் சொல்லி, அரசன் கனவில் தோன்றி ஆழ்வார் ஒரு குற்றமு மில்லாதவர், தங்க வட்டில் நிகழ்ச்சிகளெல்லாம் தம் செயலே என்று கூறி ஆழ்வாரை முன்பு போலவே தம் திருத்தொண்டிலிடும்படி அருள் பாலித்தார்.

ஆழ்வாரும் மறு பிறவியெடுத்தது போல் தம் தவறுகளினின்றும் நீங்கித் தூய்மையான பக்தியுடன் திருநந்தவனத்தைத் திருத்தித் திருமாலை தொடுத்துத் தொண்டாற்றி வந்தார். தம்வாழ்க்கையில் சிலகாலம் வீணே கழிந்தது பற்றி மிகவும் மனம் நொந்தார். அதற்குக் கழுவாயாக அரங்கன் திருமுற்றத்தில் தொண்டு செய்யும் அடியார்களின் பாத தூளியே தம் சென்னிக்கு அணி என்று கொண்டு, அன்று முதல் விப்ர நாராயணர் என்ற தம் பெயரை மாற்றித் தொண்டரடிப்பொடி(யாழ்வார்) என்று தம்மை அழைக்குமாறு யாவரிடமும் வேண்டினுர். பெருமாளுடைய திருவருளாலே விசேட ஞானம் கைவரப் பெற்றுப் பகவானிடம் பக்தி செய்யும் பாகவதர்களின்—தொண்டர்களின் திருவடித்துகளே தமக்கு மிகவும் வேண்டுவது என்று கருதித் திருமாலடியார்களான பக்தர்களின் பாததூளியில் எப்பொழுதும் மூழ்கிப் பெருமகிழ்வெய்தினுர். அத்துகளில் மூழ்குவதால் கங்கை, காவிரி போன்ற புண்ணிய நீர்த் துறைகளில் மூழ்கிய பயன்களைப் பெறுவதாகவும் போற்றிவாழ்ந்தார். அதனுலே இன்றும் தொண்டரடிப்பொடியாழ்வார் என்னும் பெயர் இவருக்கு நிலைப்பதாயிற்று. இப்படி அரங்கனுக்கும் அவர்தம் அடியவர்களான தொண்டர்களுக்கும் திருத்தொண்டு புரிவதையே தம் வாழ்க்கையின் பயனுகக் கொண்டு வாழ்ந்த ஆழ்வார் இனிய தமிழில் 'திருமாலை, திருப்பள்ளியெழுச்சி' என்ற இரு பிரபந்தங்களை உலகுய்ய அருளிச் செய்துள்ளார். 'திருமாலை அறியாதவன் திருமாலை அறியான் (அல்லது) பெருமாளை அறியான்' என வழங்கும் பழமொழியினுல் திருமாலையின் பெருமையை அறியலாம். இவர் அவதரித்த திருநாளைக் கீழ்வரும் பாட்டால் போற்றுவோமாக.

மன்னியசீர் மார்கழியில் கேட்டையின்று மாநிலத்தீர்
என்னிதனுக் கேற்றமெனி லுரைக்கேன்—துன்னுபுகழ்
மாமறையோன் தொண்டரடிப் பொடியாழ்வார் பிறப்பால்
நான்மறையோர் கொண்டாடும் நாள்.

—:o:—




## திருவொற்றியூர்க் கோயில்

திரு. கே. எஸ். நரசிம்மன், பி.ஏ., பி.எல்., ஐ.ஏ.எஸ்.,
ஆணையர், அறநிலையத்துறை, சென்னை.

சென்னை மாநகரிலுள்ள தேவாரப்பாடல் பெற்ற தலங்களில், திருவொற்றியூர்க் கோயில் மிக்க பழமையும் பெருமையும் வாய்ந்ததாகும். சென்னையின் வடகோடியில் திருவொற்றியூர், நடுவில் திருமயிலாப்பூர், தென்கோடியில் திருவான்மியூர் ஆகிய மூன்று சிவதலங்களும், சிவபிரானின் மூன்று திருக்கண்களைப் போலச் சிறந்து திகழ்கின்றன. இவற்றுள் அப்பர், சம்பந்தர், சுந்தரர் ஆகிய மூவர் பாடலும் (எட்டு திருப்பதிகங்கள்) பெற்ற சிறப்பு, திருவொற்றியூருக்கே உண்டு. இதற்கு ஆதிபுரி எனவும் பெயர் உண்டு.

முன்னொரு காலத்தில் அரசன் ஒருவன், எல்லா ஊர்களுக்கும் நிலத் தீர்வையை ஏற்றி விதித்துச் சுற்றோலை அனுப்பியபொழுது, அரசனுக்கும் திருவோலைநாயகம் என்னும் அரச அலுவற்றலைவனுக்கும் தெரியாதபடி, அச்சுற்றோலையில் “இவ்வாணையை ஆதியூர் நீங்கலாகக் கொள்க” என இறைவன் வரி பிளந்து எழுதிவைத்து, இவ்வூருக்கு நிலத்தீர்வையில் அரசன் ஒற்றி (விலக்கு) அளிக்கும்படி செய்தருளினன். ஆதலின், இவ்வூருக்கு ஒற்றியூர் என்னும் காரணப்பெயர் ஏற்பட்டதென்பது வரலாறு. இங்ஙனம் அரசனின் சுற்றோலையில் எழுதி வைத்தருளின மையால், இங்குள்ள சிவபிரானுக்கு ‘எழுத்தறியும் பெருமான்’ என்பது சிறப்புப் பெயர்.

உபமன்னிய முனிவரிடத்தில் சிவதீக்கை பெற்றுத் தம்மை வழிபட்ட வாசுகி என்னும் நாகத்தை, இறைவன் திருமேனியில் ஏற்றருளினர் ஆதலின், படம்பக்கநாதர் என்றும், இங்குள்ள இறைவனுக்குப் பெயர் வழங்கும். தம்முடைய அடியவணுகிய ஏலேலசிங்கன் என்பவருக்கு, அரசனுக்குக் கையுறையாகக் கொடுப்பதற்காக மாணிக்கம் ஒன்றை வழங்கியளியதனுல் தியாகேசர் என்றும் இங்குள்ள பெருமான் வழங்கப் பெறுவார். தொண்டை நாட்டில் திருவொற்றியூர், திருவான்மியூர், திருக்கச்சூர் என்னும் தலங்கள், தியாகேசருக்குரிய சிறப்புத் தலங் களாகத் திகழ்ந்து வருகின்றன.

"ஓம்பினேன் கூட்டை வாளா உள்ளத்தோர் கொடுமை வைத்துக்
காம்பிலா மூழை போலக் கருதிற்றே முகக்க மாட்டேன்;
பாம்பின்வாய்த் தேரை போலப் பலபல நினேக்கின் றேனே
ஓம்பிநீ உய்யக் கொள்ளாய் ஒற்றியூர் உடைய கோவே."

"மனம்எனுந் தோணி பற்றி மதியெனுங் கோலே ஊன்றிச்
சினம்எனுஞ் சரக்கை ஏற்றிச் செறிகடல் ஓடும் போது
* மனன்எனும் பாறை தாக்கி மறியும்போது அறிய வொண்ணுது
உனேயுனும் உணர்வை நல்காய் ஒற்றியூர் உடைய கோவே,"

என்று, திருவொற்றியூர் பற்றித் திருநாவுக்கரசர் பாடியருளியுள்ள பாடல்கள் எவருள்ளத்தையும் உருக்கிக் கொள்ளேகொள்ள வல்லன வாகும்.

இராமலிங்க சுவாமிகள், தம்முடைய இளமைக்காலம் முதலே, தாம் சென்னேயில் இருந்தபோதெல்லாம், திருவொற்றியூருக்குத் திங்கட் கிழமையும் வெள்ளிக்கிழமையும் தவருது சென்று, முறையே எழுத்தறியும் பெருமானேயும், வடிவுடையம்மையையும் அன்புடன் வழிபட்டு வந்தார். "திருவருட்பாவில் எழுத்தறியும் பெருமான்மாலே," "வடிவுடைமாணிக்க மாலே" எனப் பாடல்களும், பதிகங்களும் பல அமைந்திருத்தல் காணலாம். இங்கிதமாலே என்னும் இனிய அரும்பெறல் நூலும், அவரால் திரு வொற்றியூர்த் தியாகேசப்பெருமான் மீது பாடப்பெற்றதே யாகும்.

திருவொற்றியூர், சைவசமய ஆசிரியர்களில் ஒருவராகிய சுந்தரமூர்த்தி சுவாமிகள் வாழ்க்கையோடு பெரிதும் தொடர்புடைய சிறந்த தலமாகும். இங்குத்தான் சிவபிரான் திருவருளால், சுந்தரருக்கும் சங்கிலியார் என்னும், சிவநேயச் செல்வியாருக்கும் திருமணம் நிகழ்ந்தது. துறவி களில் தலேசிறந்தவராகிய பட்டினத்தடிகளார், பல தங்களேயும் தரிசித்துக் கொண்டு வந்து, இறைவன் அருளியபடி பேய்க்கரும்பு தித்திக்கப் பெற்றுத் தமது திருமேனியே சிவலிங்கமாக மாறி அமையத், திருவருளிற் கலந்த தலம் இதுவேயாகும். இன்னும் அவர்தம் சமாதிக்கோயில், பல்லாயிரக்கணக்கான மக்களால் போற்றி வழிபடப்பெற்று வருகின்றது. அறுபான்மும்மை நாயன்மார்களில் ஒருவராகிய கலியநாயனூர் என்பவர், கோயிலின் உள்ளும் புறமும், தம் வறுமைக்காலத்திலும் கூடத் தவரு மல். திருவிளக்கு ஏற்றி வழிபட்டு அருள்பெற்றதும் இத்தலமேயாகும்.

ஏறத்தாழ 1500 ஆண்டுகளுக்கு முற்பட்டு, இன்றுவரையில் சிறப் புற்று விளங்கிவரும், இத்தெய்விகத் தலத்தின் பெருமைக்கு ஓர் எல்லேயேயில்லே. இங்குள்ள "வாவியெலாம் தீர்த்தம், மணல் எல்லாம் வெண்ணீறு" என்று முற்றத்துறந்த பட்டினத்தடிகளார் இத்தலத்தைப் புகழ்ந்து போற்றித் துதித்துள்ளார். வழிவழியாக வந்த தமிழக அரசர்கள் ஆகிய சோழர், பாண்டியர், விசயநகர மன்னர் ஆகிய பலரும் இக்கோயிலேப் பெரிதும் போற்றி நன்கொடைகள் பற்பல வழங்கியுள்ள னர் என்பது கல்வெட்டுக்களால் தெரிகின்றது. அன்பர்கள் அனேவரும் இக்கோயிலேத் தரிசித்து வழிபட்டு, இறையருள் பெற்று மகிழ்வார்களாக.

---

* மனன்-(சித்தஜ:) மனத்திற்ருேன்றுவோன், மன்மதன்.




## உமை-முருகு-இறைவர்

[புலவர் திரு. ந. ரா. முருகவேள், எம்.ஏ., எம்.ஓ.எல்.,]

முன்னுரை :

சிவபெருமான் உயிர்களின் கருமேனி கழிப்பதன் பொருட்டுக் கொண்டருளிய திருமேனிகள் பலவற்றுள், "உமை முருகு இறைவர்" என்பது ஒன்று. சிவபெருமான் ஸ்கந்தமூர்த்தி எனப்படும் முருகனைத் தமக்கும் உமாதேவியாருக்கும் நடுவே இருக்கச் செய்து எழுந்தருளி யிருக்கும் திருவுருவமே "சோமாஸ்கந்த மூர்த்தம்" (ஸ+உமா+ஸ்கந்த) அல்லது "உமைமுருகு இறைவர்" திருவுருவம் எனப்படும். எல்லாச் சைவத் திருக்கோயில்களிலும் இத்திருவுருவம் சிறப்புற வைத்துப் போற்றப் பெறுகின்றது.

குமரகுருபரர் :

குமரகுருபர சுவாமிகள், பதினேழாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் விளங்கிய தலைசிறந்த அருட்பெருங் கவிஞர் (கி பி. 1625-1688). மதுரை யில் இருந்து அரசு புரிந்த திருமலைநாயக்க மன்னரால் (கி பி. 1623-1659), பெரிதும் மதித்துப் போற்றப் பெற்ற சிறப்புடையவர். தமிழ் நாட்டி னின்று யாத்திரையாகச் சென்று, காசியில் நெடுங்காலம் வதிந்தவர். அங்கே குமாசுவாமி மடம் அமைத்தவர். திருச்செந்தூர் முருகனின் திருவருள் பெற்றவர். இத்தகைய பெருஞ்சிறப்பு மிக்க குமரகுருபரர், சோமாஸ்கந்தமூர்த்தம் பற்றி, ஓர் அழகிய கருத்தை அரிய இனிய கவிதையாக வெளியிடுகின்றார்.

வடநாட்டில் உள்ள திரிவேணிசங்கமம், மிகவும் புகழ் பெற்றதொன்றா கும். கங்கை, யமுனை, சரசுவதி என்னும் மூன்று பேராறுகளும், ஒன்று கலந்து கூடும் இடமே திரிவேணிசங்கமம் (திருமுக்கூடல்) எனப்படும். யாத்திரை செய்பவர்கள் அங்குச் சென்று நீராடுதலை மிகவும் சிறப்பாகக் கருதிப் போற்றுவர். குமரகுருபரர் வடநாட்டில் ஏறத்தாழ 30 ஆண்டுகள் வாழ்ந்திருந்தவர். எனவே அவர் அவ்வப்போது திரிவேணிசங்கமம் சென்று திருமுழுக்குச் செய்து மகிழ்ந்திருத்தல்கூடும் அதனால் திருவாரூரில் எழுந்தருளியுள்ள "இருந்தாடும் அழகர்" என்னும் தியாகராசர் ஆகிய சோமாஸ்கந்த மூர்த்தம் பற்றிப் பாடக்கருதும் அவர், திரிவேணி சங்கமத்தினை நினைவு கூர்ந்து, இரண்டினையும் இணைத்தி யைத்து இனிது பாடுகின்றார்.

சிவபெருமான், உமாதேவி, முருகப்பெருமான் ஆகிய மூவரும், சோமாஸ்கந்த மூர்த்தமாக ஒருங்கே வீற்றிருத்தல், திரிவேணிசங்கமம் போன்ற அழகிய நல்ல காட்சியாகத் திகழ்கின்றது. சிவபெருமான்

தன் மெய்யெலாம் வெண்ணீறு சண்ணித்திருத்தலால், வெண்மை நிறமுடைய கங்கையாற்றைப் போல விளங்குகின்றான் உமாதேவியார் தனது நீலநிறத்தால், யமுனை நதியைப் போலத் திகழ்கின்றாள். சிவந்தநிறம் வாய்ந்த முருகனோ, கலங்கிச் சிவந்து பெருகிவரும் சரசுவதிநதியைப் போலக் காணப்படுகின்றான்.

"தம்மேனி வெண்பொடியால்",—திருவாரூர் நான்மணிமாலை.

இப்பாடலில் கங்கை யமுனை சரசுவதி என்னும் நதிகள் மூன்றும் முறையே, இறைவனும் இறைவியும் முருகனும் ஆகிய மூவருமாக உருவகம் செய்யப் பெற்றிருக்கும் திறம், அறிந்து இன்புறற்பாலது.

**கச்சியப்பர் :**

கந்தபுராணம் பாடியருளிய கச்சியப்ப சிவாசாரியர், ஒரு மாபெருங் கவிஞர். காஞ்சிபுரம் குமரகோட்டத்தில் சிவாசாரியராக இருந்து முருகனை வழிபட்டு, அருள்பெற்ற பெருந்தகை. அவர் பகலுக்கும் இரவுக்கும் இடைநடுவே போதரும் மாலைக் காலத்தின் இயல்பினை வருணனை செய்யத் தலைப்படுங்கால், அம்மைக்கும் அப்பனுக்கும் நடுவே குழந்தை வடிவில் முருகன் அமர்ந்திருக்கும் சோமாஸ்கந்த மூர்த்தத்தினையே நினைந்து. தமது கவித்திறமும், கற்பனைத்திறனும், பக்தியுணர்வும் தோன்றப் பாடுகின்றார்.

ஒரு பாடலில் "ஏலவார் குழலாள்" என்றது, காஞ்சிபுரத்தில் உள்ள காமாட்சியம்மைக்கு உரிய ஒரு திருப்பெயர். "ஏல வார்குழலாள் உமை நங்கை என்றும் ஏத்தி வழிபடப்பெற்ற காலகாலனைக் கம்பன் எம்மானைக் காணக் கண் அடியேன் பெற்றவாறே" என்பது சுந்தரர்தேவாரம். காஞ்சியில் திருவேகம்பநாதர் கோயிலுக்கும், காமாட்சியம்மை கோயிலுக்கும் இடைநடுவே முருகப்பெருமான் எழுந்தருளி விளங்கும் குமரகோட்டம் அமைந்திருத்தல், சோமாஸ்கந்த மூர்த்தத்தின் தத்துவ நுட்பத்தினைப் புலப்படுத்துவதாகும் என்பது இங்கு அறிந்து மகிழ்தற்குரியது.

**ரவீந்திரநாத தாகூர் :**

"நம் இந்திய நாட்டுப் பழம்பெருஞ் சான்றோர்களும், தத்துவ ஞானிகளும், தவநெறிச் செல்வர்களும், உலகையும் கடவுளையும் பற்றி ஆராய்ந்தறிந்து உணர்ந்திருந்த கருத்துக்கள் அனைத்தையும் 'சச்சிதாநந்தம்' என்னும் சுருக்கம் மிக்க சொற்றொடர் ஒன்றே தெளிவுற விளக்கி நிற்கின்றது" (1) என நம் இந்திய நாட்டுப் பெருங்கவிஞரேறு

---

(1) "The view of this world which India has taken is summed up in one compound word *Satchidanandam.* The meaning is that reality, which is essentially one, has three phases. The first is *Sat*; it is the simple fact things are, the fact which relates us to all things through the relationship of comman existence. The second is *Chit*; it is the fact that we know, which relates us to all things through the relationship of knowledge. The third is *Ananda*; it is the fact that we enjoy, which unites us with all things through the relationship of Love."

—Rabindranath Tagore,
—*The Message of the Aranyakas*

ஆகிய இரவீந்திரநாத தாகூர் இயம்புவர். உள்பொருள் ஆகத்திகழும் கடவுட்பொருள் ஒன்றே, சத்து, சித்து, ஆனந்தம் என்னும் முப்பெரும் பண்பும் கூறும் உடையதாக ஒளிர்கின்றது. சத்து-உள்ளது, உண்மை. சித்து-அறிவு. ஆனந்தம்-இன்பம். எனவே, சச்சிதானந்தம் என்பதனைத் தமிழில் உண்மை-அறிவு-இன்பம் என்று வழங்குவர். இம்மூன்று இயல்புகளின் அழகிய சிறந்த பருவடிவ அமைப்பாக விளங்குவதே, ' உமைமுருகு இறைவர் ' திருவுருவமாகும். சோமாஸ்கந்த மூர்த்த நிலையில், சத்து-இறைவன்; சித்து-இறைவி; ஆனந்தம்-முருகன் என விளங்குதலைச் சமய தத்துவ ஞான நூல்கள் சாற்றுகின்றன.

" மல்லல்வளம் கனிந்த ; " பொருள்உள சத்தும் ;—குமரகுருபரரும், பாம்பன் குமரகுருதாசரும் அருளியவை காண்க.

### மூவகை இலக்கணம்

திருவாசகம் என்னும் செந்தமிழ்த் தெய்வமாமறையின் சிறப்பு, யாவரும் அறிந்ததொன்று. அதன் ஒவ்வொரு திருப்பாடலும், அப்பாடலின்கண் வரும் அழகிய சொற்களும் சொற்றொடர்களும், எத்துணையோ உயர்ந்த பல பொருள் நுட்பங்களை பொதிந்து கொண்டு இருப்பவை என்பதும், அனைவருக்கும் உடன்பாடு. " அருமையில் எளிய அழகே போற்றி" என்பது, திருவாசகத்தில் போற்றித் திருவகவல் என்னும் பகுதியில் வருகின்ற ஒரு சிறந்த அடியாகும். இவ்வடியைக் கடவுள் இலக்கணம் கூறும் ஒரு சிறந்த இனிய நூற்பா என்றே கூறலாம். கடவுளின் எல்லையற்ற பற்பல நல்லியல்புகளையெல்லாம், இவ்வடியானது ஒருங்கு தொகுத்துச் செவ்விதின் உணர்த்த வல்லதாகத் திகழ்கின்றது. அன்பர் அல்லாதவர்களுக்கு அருமை உடையவராக அவர்கள் உணரமுடியாத நிலையில் கடவுள் விளங்குகின்றார். அன்பர்களுக்கோ அவர்கள் விரும்பும் முறைகளிலெல்லாம் எளிவந்து இன்னருள் புரிகின்றார். அத்தகை அவர்தம் இயலும் செயலும் அழகு மிக்கோங்கிப் பிறங்குகின்றன. இத்தகைய அருமை எளிமை அழகு என்னும் முத்திற இலக்கணங்களுள் அருமை-சிவம்; எளிமை-சக்தி; அழகு-முருகன் எனக் கொள்ளுதல் பெரிதும் பொருத்தமாகப் பொலிகின்றது.

### மூவகை நிலைகள்

கடவுள் தன்னியல்பில் எல்லாவற்றிற்கும் எல்லோருக்கும் அப்பாற்பட்டு மிக மேலானவராக விளங்குகின்றார். இதனைக் கடந்தநிலை (Transcendence) என்பர். அவரே 'எல்லாப் பொருள்களிலும், எல்லா உயிர்களிலும் பிரிவற இயைந்துநின்று இலக்குகின்றார். இதனைக் கலந்தநிலை அல்லது அந்தர்யாமித்துவம் (Immanerce) என்பர். கடவுள் தம்மை வழிபடும் அன்பர்களுக்கு அவர்கள் விரும்பும் திருவுருவங்களில் தோன்றிக் காட்சி தந்து, அவரது உள்ளத்தைக் கொள்ளை கொண்டு மகிழ்வித்து அருள்புரிகின்றார். இதனைக் கவர்ந்தநிலை (Appearance) எனலாம். 'என் உள்ளம் கவர் கள்வன்' எனத் திருஞான சம்பந்தர் அருளிச் செய்திருத்தல் இங்கு அறிதற்குரியது. இம்மூவகை நிலைகளுள் கடந்தநிலை-சிவம்; கலந்தநிலை-சத்தி; கவர்ந்தநிலை-முருகன் என்று கூறலாம்.

முப்பெரும் பண்புகள்:

மேலைநாட்டுச் சிந்தனையாளர்கள் அனைவரும் மிக விதந்தெடுத்துப் போற்றி, உண்மை (Truth) நன்மை (Goodness) அழகு (Beauty) என்னும் மூன்றையும், எல்லாவற்றிற்கும் மேலான (மிகச் சிறந்த) பண்பு நலன்களாகக் குறிப்பிடுவர் (1). உலகத்தில் எல்லாவற்றிற்கும் மேலான தாய்ச் சிறந்து திகழ்வது உண்மையே. உண்மை எதுவோ அதுவே நன்மையாகும். நன்மை (எங்கே) எதில் உள்ளதோ, (அங்கே) அதில் அழகும் இருக்கும். எனவே உண்மை நன்மை அழகு ஆகிய மூன்றும், தம்முள் ஒன்றினொன்று பிறிவற இயைந்து நிற்கும் என்பது பெறப்படும். இவற்றையே நம்முன்னோர்கள் சத்தியம் சிவம் சுந்தரம் எனக் குறிப்பிடுவர். இம்மூன்றின்கண் அடங்காத உயர்ந்த பண்புநலன் எதுவும் இல்லை. உலக மக்கள் அனைவராலும் விரும்பிப் போற்றப்படும் இம் முப்பெரும் பண்புகளுள் உண்மை-சிவம்; நன்மை-சத்தி; அழகு-முருகன் என்று கொள்ளுதலும் மிக மிகப் பொருந்துவதாகும்.

முப்பொருட்டன்மை:

பழந்தமிழ் மக்கள், மனித சமுதாய வளர்ச்சிகளுக்குக் குடும்ப வாழ்வு மிகவும் இன்றியமையாதது என உணர்ந்திருந்தனர். இல்லறம் என்னும் நல்லறம் ஆகிய குடும்ப வாழ்வு செழித்தால்தான், நாடும் சமுதாயமும் நலம் பெற்றோங்கித் திகழ்தல் இயலும். குடும்ப வாழ்வு நலம் குலவப் பெறுமாயின், குவலய வாழ்விலும் அன்பும் அறனும் நிறைந்து, இன்பமும் பொருளும் மிகுந்து, மண்ணகமே விண்ணகமாய் மாறிப் பொலிந்து மாட்சிமையுறும். குடும்ப வாழ்க்கை நலம் பெற வளர்தற்கு, ஒருவனும் ஒருத்தியும் முறைப்படி மணந்து கொள்ளுதலும், இனிய நல்ல மக்கட் பேறு எய்துதலும் இன்றியமையாதன. கணவனும் மனைவியும் குழந்தையும் ஆகிய முப்பொருட்டன்மை (Trinity) திகழ்வதே, குடும்ப வாழ்வின் அரும்பெரும் சிறப்பு (2).

ஐங்குறு நூற்றுச் செய்யுள் (401), "ஆண்மானும் பெண்மானும் ஆகிய இரண்டிற்கும் இடையே, அவை ஈன்றெடுத்த மான்மறி ஒன்று இருந்தாற்போல, இனிய தமது புதல்வனைத் தமக்கு இடையில் வைத்திருக்கப் பெறும் கணவனும் மனைவியும் மகிழ்ச்சியுடன் விளங்கும் காட்சி, மிக்க பேரின்பம் விளைவிப்பதாகும். இவ்வுலகத்திலேனும் மேலுலகத்திலேனும், அதற்கு இணையான இன்பம் வேறு பிறிதெதுவும் இல்லை" என்றுணர்த்தி, இம் முப்பொருட் டன்மையினை விளக்கியிருத்தல்

---

(1) "Among all the meaningful values of the super-organic world, there is the supreme integral value—the veritable summum bonum. It is the indivisible unity of Truth, Goodness and Beauty..."

—*Prof. Pitrim A. Sorokin,*
This is My Philosophy, A Symposium, p. 184.

(2) "The perfect and complete marriage in its full development is a *trinity.*"

—*Prof. Havelock Ellis,*
Studies in Psychology, Vol. II p. 508.

காணலாம். கிறித்துவ சமயத்திற் கூறப்பெறும் பரமபிதா-தேவகுமாரன்-பரிசுத்த ஆவி என்னும் மூன்ருய தன்மைக்கும், இஃது ஏற்புடையதாக விளங்குதல், ஒப்பு நோக்குதற்கு உரியது (4). இத்தகைய உண்மைகளை உணர்த்துவதே சோமாஸ்கந்த மூர்த்தம் எனலாம்.

தமிழ்நாட்டிற்கே உரியது :

சோமாஸ்கந்த மூர்த்தம், தமிழ்நாட்டுக்கே தனிப்பெருஞ் சிறப்பாக உரியது. இந்திய நாட்டின் வேறு பிற எந்தப் பகுதிகளிலும் காணப்படாமல், தமிழ்நாட்டில் மட்டுமே தனிப்பெருஞ் சிறப்பாகச் சோமாஸ்கந்தர் திருவுருவச் சிற்பங்கள் காணப்படுகின்றன என்று ஆராய்ச்சியாளர்கள் கூறுவர். (Prof. S. Ghurye, Gods, and Men). சமண பௌத்த சமயங்களின் விளைவாகத் துறவறமே சால்புடைத் தென்னும் கொள்கை பெரிதும் பரவி வந்தகாலையில், மக்கட் சமுதாயம் வளர்ந்தோங்கி நிலைபெறுதற் பொருட்டுக் குடும்ப வாழ்வின் நலங்களையும், இல்லறமே நல்லறமாதலையும் வலியுறுத்தித் தெளிவுறுத்துதல், பக்தி இயக்கத்தைப் பரப்பி நாட்டு மக்கள்பால் மறுமலர்ச்சியுணர்வு கிளர்ந்தெழச் செய்தருளிய சமயாசிரியர்களுக்குச் சிறந்ததொரு கடமையாயிற்று. அவ்வகையிற் குடும்ப வாழ்வின் அளப்பரு நலங்களையும், அரும்பெரும் சிறப்பினையும் விளக்குதற்காகப் போற்றிப் பரப்பப்பெற்ற திருவுருவமே சோமாஸ்கந்த மூர்த்தமாகும். மாபெரும் யோகியாகத் தட்சிணாமூர்த்தி நிலையில் விளங்கும் சிவபெருமானே, மிகப்பெரிய போகி (குடும்பி) யாகவும் திகழ்வது, நினைந்து நினைந்து போற்றற்பாலதாகும்.

முடிவுரை :

பல்லவப் பேரரசர்கள் அமைத்த சிற்பங்களில், சோமாஸ்கந்தர் திருவுருவம் சிறப்பிடம் பெற்றுத் திகழ்கின்றது. மாமல்லபுரம், திருக்கழுக்குன்றம், காஞ்சிபுரம் (கயிலாசநாதர், ஏகாம்பரநாதர்). திருமறைக்காடு, திருப்புள்ளிருக்கு வேளூர் முதலிய பற்பல இடங்களில் அமைந்துள்ள திருக்கோயில்களில் எல்லாம், சிவலிங்கத்திற்குப் பின்புறம் உள்ள கருவறைச் சுவரில், இத்திருவுருவம் அழகுற அமைக்கப் பெற்றிருத்தல் காணலாம். இத்திருவுருவை அன்புடன் வழிபடுவோர் அனைவரும், கணவனும் மனைவியுமாய் இல்லற நெறி நின்று இணையிலா இன்பம்துய்த்து, நல்ல மகப்பேறும் குலவளர்ச்சியும் பெற்று, இம்மையிற் சிறந்து வாழ்வதுடன், வீடுபேறும் அடைவார்கள்.

"தொல்லை யுலகம் போற்றெடுக்கும் சோமாற் கந்தர் தமைப்பணிவோர்
நல்ல மகவும் சந்தானத் தொடர்பும் இனிது நனிபெறுவார்".
—கச்சியப்ப முனிவர்.

---

(4) "Our idea of God is Sat-Chit-Anandam, symbolised in the form of Somaskanda (Sa+Uma+Skanda) and this is the same as God the *Father*, God the *Mother* or Holy Ghost, and God the *Son*, and I have quoted in some other place the definition of these terms form Bishop Westcott, God as pure Being or Spirit, God as Light that links to him all hunanity, and God as Love."

—*J. M. Nallaswamy Pillai, B.A., B.L.,*
Studies in Saiva Siddantha, p. 139.

# மகாசிவராத்திரி

[திரு. க. கலியாணம், எம்.ஏ., டிப். எக்கான்.,]

நம் நாட்டுத் திருக்கோயில்களில் ஆண்டின் எல்லாத் திங்களிலும் எவையேனும் திருவிழாக்கள் நடைபெற்று வருகின்றன. அவ்வாறு நடைபெறும் விழாக் காலங்களில் மக்கள் விரதங்களை அனுட்டிப்பதும் வழக்கமாக இருந்து வருகிறது. இவை சிவபெருமான், திருமால், அம்பிகை, கணபதி, முருகன் இவர்களை வழிபடுதற்கானவை. மாசியில் மகாசிவராத்திரி, மார்கழியில் வைகுண்ட ஏகாதசி, புராட்டாசியில் நவராத்திரி, ஆவணியில் விநாயக சதுர்த்தி, ஐப்பசியில் கந்தசட்டி (முதலிய) விரதங்கள் மேற்கொள்ளப் பெறுகின்றன.

மாசித்திங்களில் வரும் மகாசிவராத்திரியைப் பற்றியதே இக்கட்டுரை. சிவராத்திரி என்பதில் சிவ என்பது துன்பத்தை அழிக்கிறது என்றும், இராத்திரி என்பது இன்பத்தைக் கொடுக்கிறதென்றும் கொண்டனர். எனவே, சிவராத்திரி விரதம் இருந்தால் துன்பம் நீங்கி, இன்பம் அடையலாம். சிவராத்திரியைப் பற்றி இரண்டு புராண வரலாறுகள் உண்டு. உலகத்திலுள்ள எல்லா உயிர்களும் ஒரு காலத்தில் அழிந்து விடும். அதைப் பிரளயம் என்பர். உயிர்கள் அனைத்தும் கடவுளிடம் ஒடுங்கிவிடும். இறைவன் ஒருவனே இருப்பன். அப்பெருமானின் அம்சமான சக்தியே உமாதேவி. அருள் வடிவினள்; அன்பு மயமானவள். உயிர்களுக்காகப் பெரிதும் இரங்கிப் பெருமானை நோக்கித் தவம் இருந்தாள். தவத்திற்கு மகிழ்ந்த மகாதேவன் “யாது வரம் வேண்டும்” என்று வினவினன். தேவி, “எம்பெருமானே! அடியேன் இரவு முழுவதும் தங்களைப் பூசித்தேன். ஆதலின் இது சிவராத்திரி என்று வழங்கப் பெறவேண்டும். இந்நாளில் தங்களை வழிபடும் உயிர்கள் எல்லாம் இம்மையிலும் மறுமையிலும் இன்பம் எய்துதல் வேண்டும்,” என்று விண்ணப்பித்தாள். இறைவனும் ‘அவ்வாறே ஆகுக’ என்று அருள் புரிந்தார். அழிந்த உயிர்கள் எல்லாம் தோன்றி உய்யும் வகையை நாடின. இது சிவராத்திரியைப் பற்றிய ஒரு வரலாறு.

ஒரு பிரளயத்தில் உலகமே மறைந்து விட்டது. காத்தற் கடவுள் உலகத்தை உயர்த்தி நிறுத்தினர்; படைத்தற் கடவுள் உயிர்த்தொகுதிகளைப் படைத்தார். இவ்விருவருள் யார் பெரியவர் என்ற வாதம்

உண்டாயிற்று. இவர்கள் முன் சிவபெருமான் ஒரு பெருஞ்சோதியாய்த் தோன்றினர். இவ்வனற்பிழம்பின் அடியையும் முடியையும் இருவரும் தேடினர். காணமுடியவில்லை. இறைவன் தோன்றி, "உங்கள் முன் சோதியாய் நின்ற இந்த இரவே சிவராத்திரி ஆகும். இந்த மாசித் திங்கள் கிருட்டிண பட்சம் சதுர்த்தசி திதியில் வழிபடுவோருக்கு எல்லா நன்மைகளும் உண்டாகும் முன்பு உமாதேவியும் நம்மை நோக்கித் தவம் கிடந்த நாளும் இதுவேயாகும்" என்று திருவாய் மலர்ந்தருளினர். சோதிப்பிழம்பு தோன்றிய இரவே சிவராத்திரியாகும் என்பது மற்ருெரு வரலாறு.

சிவராத்திரி ஐந்து வகைப்படும். அவை, நித்திய சிவராத்திரி, பட்ச சிவராத்திரி, மாதசிவராத்திரி, யோக சிவராத்திரி, மாக சிவராத்திரி அல்லது மகா சிவராத்திரி என்பன. ஓர் ஆண்டிலே பன்னிரண்டு மாதங்களிலும் வருகிற கிருட்டிண பட்சம் சுக்கில பட்சம் இருபத்து நான்கில் உள்ள சதுர்த்தசிகள் நித்திய சிவராத்திரி. தைமாதம் கிருட்டிண பட்சம் பிரதமை முதல் பதின்மூன்று நாட்கள் ஒரு பொழுது உணவு கொண்டு பதினன்காம் நாள் சதுர்த்தசியில் சிவபெருமானை வழிபடுவது பட்ச சிவராத்திரி. மாசி கிருட்டிணபட்சம் சதுர்த்தசி, பங்குனி முதல் திருதியை, சித்திரை கிருட்டிணபட்சம் அட்டமி, வைகாசி முதல் அட்டமி, ஆனி சுக்கிலபட்ச சதுர்த்தி, ஆடி கிருட்டிணபட்ச பஞ்சமி, ஆவணி சுக்கில பட்ச அட்டமி, புரட்டாசி முதல் திரயோதசி, ஐப்பசி சுக்கில பட்ச துவாதசி, கார்த்திகை முதல் சப்தமி, பின்வரும் அட்டமி, மார்கழி இருபட்சங்களிலும் வரும் சதுர்த்தசிகள், தை சுக்கில பட்சதிருதியை இவை மாத சிவராத்திரி. மேலே சொன்ன மாதங்களில் முறையே பிரமன், திருமால், உமாதேவி, சூரியன், உருத்திரன், குமரன், சந்திரன், ஆதிசேடன், இந்திரன், சரசுவதி, மனோன்மணி, நந்தி ஆகியோர் சிவராத்திரி விரதமிருந்து பேறு பெற்றனர் என்று புராணங்கள் கூறுகின்றன. திங்கட்கிழமையில் இரவு பகல் முழுவதும் அமாவாசை இருந்தால் அதை யோக சிவராத்திரி என்பர். ஒவ்வோர் ஆண்டிலும் மாசி கிருட்டிண பட்சம் சதுர்த்தசியிலே வருவது மாக சிவராத்திரி அல்லது மகா சிவராத்திரி.

மகாசிவராத்திரி விரதம் எப்படி அனுட்டிப்பது. இதைப் பார்ப்போம். அவ்விரதம் இருப்பவர்கள் சிவபூசை செய்யலாம் அல்லது சிவபூசை செய்வதைக் காணலாம். அதற்கு முதல் நாள் ஒரு வேளை உணவு கொள்ளவேண்டும். சிவராத்திரி யன்று காலைக் கடன்களை முடித்துக் கொண்டு, ஆலய வழிபாடு செய்தபின் சிவபூசை செய்தல் வேண்டும். கோயில், ஆற்றங்கரை, மலைச்சாரல், நந்தவனம், குருவின் வீடு, தம் இல்லம் இவை பூசை செய்வதற்கு ஏற்ற இடங்கள். இரவு முதல் சாமத்தில் சிவலிங்க மூர்த்தியைப் பஞ்ச கவ்வியத்தினுல் அபிடேகம் செய்வித்து சந்தனக் குழம்புடன் வில்வம் சாத்தி, தாமரைமலர்களால் அருச்சிக்க வேண்டும்; இரண்டாம் சாமத்தில் பஞ்சாமிர்த அபிடேகம் செய்து,

சந்தனத்துடன் தாமரை மலர் சாத்தி, துளசியால் அர்ச்சனை செய்ய வேண்டும்; மூன்றாவது சாமத்தில் தேன் அபிடேகம் செய்து, அரைத்த பச்சைக் கற்பூரத்துடன் முல்லை மலர் சாத்தி, முக்கிளை வில்வம் கொண்டு அருச்சிக்க வேண்டும்; நான்காம் சாமத்தில் கருப்பஞ்சாற்றால் திருமுழுக் காட்டி, அரைத்த குங்குமப் பூவுடன் நந்தியா வர்த்த மலர் சாத்தி, நீலோற்பலப் பூவினால் மலர் வழிபாடு ஆற்றவேண்டும். இந்த நான்கு சாமங்களிலும் தூபதீபாராதனைகள் முறையாகச் செய்ய வேண்டும். (சாமம் என்பது ஏழரை நாழிகை அல்லது மூன்று மணி அளவு. இரவு நான்கு சாமங்களுக்கு 30 நாழிகை அல்லது 12 மணி நேரம். ஒருமணிக்கு இரண்டரை நாழிகை). இரவு பகல் உணவு உறக்கம் இவற்றை ஒழிக்க வேண்டும். விடிந்ததும் நீராடித் தூய்மை செய்து கொண்டு, ஆலய வழிபாடு செய்து, பின்னர் ஆறுநாழிகைக்குள் பாரணை (உணவு) பண்ண வேண்டும். அன்று பகல் முழுவதும் தூங்காமலிருந்து சிவகதைகள் படித்தும் கேட்டும் காலத்தைப் பயன் படுத்திக் கொள்ளவேண்டும். இந்த முறையில் சிவபூசை செய்ய இயலாதவர்கள் சிவராத்திரியன்று உணவு உறக்கம் ஒழித்து, சிவகதைகள் கேட்டு, சிவாலய வழிபாடு செய்து, மறுநாள் காலையில் பாரணை செய்யலாம். சிவராத்திரியன்று இரவு பதினான்கு நாழிகைக்குமேல் மூன்றே முக்கால் நாழிகை (ஒன்றரை மணியளவு) சிவவழிபாட்டிற்கு மிகச் சிறந்த காலமென்றும், அப்படிச் செய்வது மகாபுண்ணியம் என்றும் கூறுவர்.

நம் நாட்டில் சிவராத்திரி விரதமிருந்து பேறு பெற்றவர் வரலாறுகள் பல வழங்குகின்றன. புலிக்கஞ்சியவேடன் மரத்தின் மேல் ஏறினான். புலி கீழே இருந்தது. இரவில் தூங்கினால் கீழே விழுந்து விடுவோ மென்று விழித்திருப்பதற்காக மரத்தின் இலைகளைப் பறித்துக் கீழே போட்டுக் கொண்டிருந்தான். பொழுது விடித்தது புலியைக் காண வில்லை. கீழே இறங்கினான், சிவலிங்கத்தைக் கண்டான். அவன் ஏறி யிருந்தது வில்வமரம். பறித்துப் போட்டது வில்வ தளங்கள். அன்று சிவராத்திரி. அவ்வேடன் வீடுபேறடைந்தான். புலியாக வந்தது சிவபெருமான் தான் என்று கூறுவர்.

சிவராத்திரி விரதத்தால் உடல் தூய்மை, உள்ளத் தூய்மை, ஐம்புலன் ஐம்பொறி அடக்கம், ஆண்டவனிடம் ஒன்றிய பேரன்பு முதலிய நன்மைகள் ஏற்படுகின்றன. திருக்காளத்தி, திருக்கோகரணம், திருப்பருப்பதம் ஸ்ரீசைலம், இராமேசுவரம் முதலிய பாடல் பெற்ற பதிகளில் மகாசிவராத்திரி விழா மிக்க சிறப்பாகக் கொண்டாடப் பெறு கின்றது. அந்த நன்னாளில் முறைப்படி விரதமிருந்து இறைவன் திருவருளுக்குப் பாத்திரமாவோமாக.



# அருளோசை

பிற்சேர்க்கை மார்ச்சு 1973.

பாடம் 9 வினவிடை சந்தா எண்............

[வினக்கள் இந்த இதழ்க்கட்டுரைகள் பற்றியனவே. விடைகள் வினக்களின் கீழேதான் எழுதவேண்டும். சொந்தக் கையெழுத்தில் எழுதி, 31-3-73-க்குள் அனுப்பவேண்டும்].

மதிப்பெண் சமம்] [மதிப்பெண் 100

1, விப்ரநாராயணரைத் திருவரங்கப்பெருமான் எவ்வாறு ஆட்கொண்டார் ?

2. சிவாராத்திரி எத்தனை வகைப்படும்? விளக்குக.

3. 'எழுத்தறியும் பெருமான்' யார்? அப்பெயர் ஏற்படக் காரணம் என்ன? அவருக்கு வேறு திருநாமங்கள் உளவோ?

4. கடவுள் உண்டா இல்லையா என்ற கொள்கை எவ்வாறு ஆராயப்படுகிறது?

5. அர்த்த பஞ்சகம் எவை? அவற்றுக்கு உவமை யாவை?

6. திருவொற்றியூர்ப் பெருமானை வழிபட்டுப் பேறுபெற்றவர்கள் யாவர் ?

7. நால்வகைப் பண்புகளைப் பற்றிச் சுருக்கி வரைக.

8. மனத்தினுடைய மிகச் சிறந்த தொழில் நினைப்பு என்பதை விளக்குக.

9. பெரியாழ்வார் தம் மனக் குறையை எவ்வாறு பேசுகிருர் ?

10. கடந்தநிலை-கலந்தநிலை-கவர்ந்தநிலை விளக்குக.

கையெழுத்து

[பெரிய எழுத்தில் தெளிவாக எழுதுக]

பெயர் வயது

கதவு எண், தெரு

ஊர்—அஞ்சல் நிலையம்

மாவட்டம்

இப்பகுதியில் விடைகளை எழுதி உரிய அஞ்சல் தலைகளையொட்டிக் கீழ்க்காணும் முகவரிக்கு அனுப்ப வேண்டும் :—

"அருளோசை"
தமிழ்நாடு தெய்விகப் பேரவை,
9, மகாராஜா சூரியராவ் சாலை,
ஆழ்வார்ப்பேட்டை, சென்னை-600018.

## STATEMENT ABOUT OWNERSHIP AND OTHER PARTICULARS ABOUT ARULOSAI

FORM IV (See Rule 8)

| | |
|---|---|
| 1. Place of Publication | 9, Maharaja Surya Rao Road, Madras-600018 |
| 2. Periodicity of its Publication | Monthly |
| 3. Printer's Name | A. Narayanaswami, B.A. |
| (Whether citizen of India) | Yes |
| (if foreigner, state the country of origin) | ...... |
| 4. Publisher's Name | A. Narayanaswami, B.A. |
| (Whether citizen of India) | Yes |
| (if foreigner, state the country of origin) | ...... |
| Address | 9, Maharaja Surya Rao Road Madras-600018 |
| 5. Editor's Name | A. Narayanaswami, B.A. |
| (Whether citizen of India) | Yes |
| (if foreigner, state the country of origin) | ...... |
| Address | 9, Maharaja Surya Rao Road Madras-600018 |
| Names and addresses of individuals who own the newspaper and partners or shareholders holding more than one percent of the total capital | Tamil Nadu Deivika Peravai 9, Maharaja Surya Rao Road Madras-600018 |

I, A. Narayanaswami hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

*Date* 15—3—73

A. Narayanaswami, B.A.
*Publisher.*

---

## " அருளோசை "

### வினு விடைப் பகுதி—பிப்ரவரி-73
### பரிசு பெற்றவர்கள்

முதல் பரிசு: திரு. நா. சி. சிவஞானம், புதுமடம் இராமநாதபுரம் மாவட்டம். சந்தா எண் 1846.

இரண்டாம் பரிசு: திரு. ச. லெனின், எம்.பி.பி.எஸ். திருத்துறைப் பூண்டி, தஞ்சை மாவட்டம். சந்தா எண் 985.

மூன்றும் பரிசு: திரு. மு. விஜயன், (சிறைவாசி) மத்திய சிறை, சந்தா எண் 1821.

நான்காம் பரிசு: புலவர் திரு சீ. மு. குமார், உத்தம பாளையம், மதுரை மாவட்டம், சந்தாஎண் 352.

---